உ

சிவமயம்

# திருவாலங்காட்டுத் தலவரலாறும் திருப்பதிகங்களும்





வெளியீடு:

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,

திருத்தணி

உ

சிவமயம்

# திருஆலங்காட்டுத் தலவரலாறும் திருப்பதிகங்களும்




வெளியீடு:

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்
திருத்தணி

விலை ரூ. 10.00

32/1

முனைவர் **மு. தமிழ்க்குடிமகன்,** எம்.ஏ.,பி.எச்.டி.,
தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப்பண்பாடு
இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர்.
தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.

# சிறப்புரை

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் -
இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்"

என்பது "தமிழ்விடு தூது" நூலாசிரியர் வழங்கியுள்ள விழுமிய கருத்தாகும்.

தமிழமுதம் நம்போன்ற மாந்தருக்கு மட்டுமன்றி, இறைவருக்கும் திகட்டாத தீஞ்சுவைத் தெள்ளமுதாக அமைவதை இலக்கியங்கள் நமக்கு நன்கு எடுத்துக்காட்டுகின்றன.

"தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றாள்
தடாதகா தேவி என்று ஒருபேர்
தரிக்க வந்ததுவும் தனிமுதல் ஒரு நீ
சவுந்தர மாறன் ஆனதுவும்
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும், தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில் இக்
கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார்?"

என்று குமரகுருபரர் பாடியிருத்தல் காண்க.

"எத்திறத்தினும் ஏழுலகும்புகழ் முத்து முத்தமிழ்"

என்பது கவிச்சக்கரவர்த்தி வாக்கு.

''ஞானஉலா'' எனும் நூல், சுந்தரர் தோழராகிய சேரமான் பெருமான் நாயனாரால் திருக்கயிலையில் அருளிச்செய்யப்பட்ட சிறப்புடையது. ஆதலால் மண் ணுலகம் அன்றி விண்ணுலகும், மூவுலகும் ஏழுலகும் புகழும் பெருமை பெற்றது நம் தமிழ்மொழியே என்பதைச் சான்றோர்கள் பலரும் எடுத்துரைத்துள்ளார்கள்.

''ஓங்கலிடைத் தோன்றி உயர்ந்தோர்
தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்அகற்றும் -
ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னேரில்லாத தமிழ்''

என்ற தனிப்பாடல் உலகிருளை விரட்டி ஒளிகூட்டும் ஒப்பற்ற கதிரவனும் தமிழும் தனிப்பெருஞ்சிறப்பு மிக்கவை எனப் புகழ்ந் துரைப்பதை எண்ணி எண்ணி நாம் இன்புறலாம்.

இத்தகைய தன்னேரிலாத தமிழ் மொழிக்கு அணிசேர்ப்பன வாக ஆயிரமாயிரம் பைந்தமிழ்ப் பனுவல்களை நம் முன்னோர்கள் படைத்தளித்துச் சென்றுள்ளார்கள்.

மூத்தோர்கள் பாடியருளியுள்ள பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களும், கேடில் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களும், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் முதலான காப்பியங்களும், தோத்திரசாத்திர நூல்களும், பாடற்கரிய பரணி முதலான சிற் றிலக்கியங்களும், இன்னமுள்ள வெள்ளத்தினும் மிகுந்த இலக்கியங் கள் யாவும் நம் தமிழ்மொழி காக்கும் மெய்க்காப்பாளர்கள் என்பது ''தமிழ்விடு தூது'' நூலாசிரியர் கூறியுள்ள அரிய கருத்தாகும்.

முரசம் கறங்க, முடிவேந்தர் போற்ற இராசகாரியம் செய்யும் தமிழே! ''பாரில் அரியாசனம் உனக்கே ஆனால் உனக்குச் சரியாரும்

உண்டோ தமிழே'' என்று நம் தமிழ்மொழி பெற்றுள்ள ஈடு இணை யற்ற இலக்கியச் செல்வத்தைப் போற்றியுள்ளது '' தமிழ்விடுதூது'' நூல்.

இத்தகைய தனிப்பெருமை மிக்க நம் தமிழ் மொழிக்கு மேலும் பெருமை சேர்ப்பன திருக் கோயில்களின் சிறப்பை விவரிக் கும் - மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகியவற்றின் பெருமையைப் பைந் தமிழ்ச் செய்யுட்களில் விவரித்துப் போற்றும் தலபுராணநூல்கள் ஆகும்.

தமிழும் சமயமும் தழைத்தோங்கவும், பக்தி உணர்வுடன் பண்பாட்டு ஒழுக்கங்கள் சிறக்கவும் இத்தலபுராண இலக்கியங்கள் ஆற்றியுள்ள பெருந் தொண்டினைப் போற்றிடவேண்டுவது தமிழ் மக்களின் தலையாய கடமையாகும்.

பன்னெடும் காலத்திற்கு முன்புதோன்றிய அரிய பல தமிழ் நூல்கள்போற்றுவார் இன்மையால் கிட்டுவதற்கு அரியனவாகிப் பின் எட்டாக்கனியாக மறைந்துபட்ட கொடுமையை எண்ணுங்கால் நம் தமிழ் நெஞ்சம், கலங்கித் துடிக்கும்.

அகத்தியம் முதலாக அழிந்துபட்ட இலக்கிய நூல்கள் எத்தனை எத்தனை? சிற்றிசை, பேரிசை என மறைந்துபட்ட இசை நூல்கள்தான் எத்தனை எத்தனை?

மதிவாணர் நாடகத் தமிழ் முதலான பல நாடக நூல்களும், கோள் நூல் முதலான பல வானசாத்திர நூல்களும் மறைந்துபட்டு, அழிந்துபட்ட அவலம் இனி நேர்ந்திடல் கூடாது.

திருக்கோயில்களின் அருமை, பெருமைகளை அனைவரும் அறிய தமிழ்ச் செய்யுட்களால் பாடிப் பரவும் தல புராண நூல்களைப் போற்றிக்காக்க வேண்டுவது இந்து சமய அறநிலையத்துறையின்

தலையாய கடமை ஆவதை உணர்ந்து, தமிழ் அறிஞர் பெருமக்களின் துணையோடு அவற்றை எல்லாம் எளிய இனிய உரை விளக்கங்களோடு பதிப்பித்து வெளியிட்டு, அன்னைத் தமிழுக்கு ஆக்கமான பணிகளை அறநிலையத்துறை ஊக்கமுடன் ஆற்றிவருகின்றது.

இத்தமிழ்ப் பணியில் ஆர்வமுடன் ஈடுபட்டுள்ள அறநிலையத்துறை அதிகாரிகளையும், அலுவலர்களையும், திருக்கோயில் பணியாளர்களையும் நாம் மனமாரப் பாராட்டுகின்றேன்.

தமிழ் அன்பர்கள் அனைவரும் இத் தலபுராண நூல்களைப் படித்து இன்புற வேண்டுமெனக் கேட்டுக் கொள்கின்றேன்.

''என்னை நன்றாகக் கலைஞர் படைத்தார்
அன்னைத் தமிழுக்கு அணிசெய்யுமாறே''

அன்புள்ள,

9.12.98

32/1

திருமிகு சுகவனேஸ்வர். இ.ஆ.ப.,
சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 600 034.

## வாழ்த்துரை

இறைவனால் ''அம்மையே'' என்று அழைத்துச் சிறப்பிக்கப் பெற்ற காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து வந்து நடராசரின் திருவடிக்கீழிருந்து சிவானந்த இன்பத்தை அனுபவித்துக் கொண் டிருக்கும் திருத்தலமே ''வடாரண்யம்'' என அழைககப்பெறும் ''திருவாலங்காடு'' திருத்தலம் ஆகும்.

இறைவன் காளியுடன் ஊர்த்துவ நடனமாடிய திருத்தல மாகவும், நடராசப் பெருமான் திருநடனம் புரியும் பஞ்சசபைகளுள் இரத்தின சபையாகவும் சிறப்புற்றிலங்குவது இத்திருவாலங்காடு வடாரண்யேசுவரர் ஆலயமாகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் இத்தலத்தை பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

மேலும் காரைக்கால் அம்மையார், பட்டினத்தடிகள், அருண கிரிநாதர், கச்சியப்ப சிவாச்சாரியார், இராமலிங்கசுவாமிகள், பாம்பன் சுவாமிகள் முதலான பல அருளாளர்களும் இத்திருத்தலத்தைப் பாடிப் பரவி உள்ளனர்.

திருவாலங்காட்டிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பழையனூர், சத்தியத்திற்காக தம்முயிரைத் தந்து புகழ்கொண்ட வேளாளர் பெருமக்களால் பெருமை கொண்டு விளங்குகின்றது.

வணிகன் ஒருவன் தன் மனைவியைக் கொன்று விட அவள் ''பழையனூர் நீலி'' எனும் பேய் ஆனாள். வணிகனைக் கொல்ல பெண் வடிவில் வந்த அப் பழையனூர் நீலி'யிடம் இருந்து தன்னைக்

காப்பாற்றும்படி பழையனூர் வேளாளர்களைத் தஞ்சமடைந்தான் அவ்வணிகன்.

பெண் எனவே அப்பேயை நம்பிவிட்ட வேளாளர்கள், அவளால் அவ்வணிகனுடைய உயிருக்குக் கேடு உண்டாகுமானால் தாம் எழுபது வேளாளப் பெருமக்களும் உயிர் கொடுப்போம் என உறுதி கூறினர்.

அன்று இரவு பழையனூர் நீலி அவ்வணிகனைக் கொன்று பழி தீர்த்துக்கொள்ளவே மறுநாள் தம் வாக்கினைக் காப்பாற்றும் வகையில் வேளாளர்கள் எழுபது பேரும் யாகம் வளர்த்து அத்தீயில் புகுந்து உயிர்விட்டனர்.

வேளாளர்கள் தீப்பாய்ந்த மண்டபம் இன்றும் இத்திருவாலங்காட்டுத் திருத்தலத்தில் இருப்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

திருஞானசம்பந்தரும் பழையனூர் நீலி சரிதத்தைத் தாம் அருளியுள்ள தேவாரத்திருப்பதிகத்தில் பாடியுள்ள பாடல் பின் வருமாறு:

''துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத் தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெடம் அடிகளே''

மிகவும் பழைமையான இத்திருக்கோயிலில் ஏராளமான கல்வெட்டுக்கள் உள்ளன. கல்வெட்டில் நடராசப் பெருமானின் பெயர் ''அரங்கில் அண்டமுற நிமிர்ந்தருளிய நாயனார்'' என்று கூறப்பட்டுள்ளது.

''ஆடும் எங்கள் அப்பன் இடம்
திருவாலங் காடே''

எனக் காரைக்கால் அம்மையாரும்

"திகழ்வேடம் காளி யோடு ஆடிய
ஜெகதீசங் கேச நடேசுரர்
திருவாலங் காடினில் வீறிய பெருமாளே"

என அருணகிரிநாதரும் நடராசரின் ஊர்த்துவ நடனச்சிறப்பைப் போற்றிப் பாடியுள்ளனர். ஊர்த்துவதாண்டவம் சிவபெருமானுக்கு உரியது. அதிலும் ஊர்த்துவ நடனமாடும் திருத்தலங்களில் முதன்மை யானது திருவாலங்காடு என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய நடராசப் பெருமான் நித்தமும் ஆடும் இரத்தின சபையால் புகழ்மிக்க திருவாலங்காட்டுத் திருத்தலத்தின் சிறப்புக்கள் அனைத்தையும் பாரோர் அறிந்து பயன் பெறும் வகையில் தல புராணம் வெளியிடப்பெறுவது அறிந்து நான் மிகுந்த மனமகிழ்ச்சி அடைகின்றேன்.

புகழ்மிக்க திருத்தணி சுப்பிரமணியசுவாமி ஆலயத்தினோடு இணைந்த துணை ஆலயமாக திருவாலங்காடு ஆலயம் இந்நாளில் விளங்கி வருகின்றது. மகிமைமிக்க இவ்வாலய தலவரலாற்றினைச் சிறப்புற வெளியிடும் திருத்தணிகை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலய செயல் அலுவலர் / இணை ஆணையாளர் திரு மு.க. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், அறங்காவலர் குழுவின ருக்கும் என் மனமார்ந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

மெய்யன்பர்கள் அனைவரும் இப்பயன்மிகு நூலைப் படித்து இக, பர சுகங்கள் யாவும் பெற்று இன்புற எல்லாம் வல்ல திருவாலங்காட்டு அருள்மிகு வண்டார்குழலி அம்மை உடனுறையும் ஆலங்காட்டு அப்பர் இணையடிகளைப் போற்றி வணங்குகின்றேன்.

அன்புள்ள,
சுகவனேஸ்வர்

*15.12.'98.*

திருமிகு **எஸ். கனகய்யா,** BSc., BL.
கூடுதல் ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 600 034.

# வாழ்த்துரை

''செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே''

என்று நாளும் சிவனருளில் திளைத்து இன்புற்ற அறுபத்து மூன்று நாயன்மார்களில் இறைவரால்

''அம்மையே'' என்று அழைத்துச் சிறப்பிக்கப்பட்ட காரைக்கால் அம்மையார் வரலாற்றுடன் இணைந்த திருத்தலம், தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற திருத்தலங்களில் ஒன்றான திருவாலங்காடு திருத்தலம் ஆகும்.

''கூடுமாறு அருள் கொடுத்து
குலவு தென் திசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர்
நிலவிய ஆலங்காட்டில்
ஆடுமா நடமும் நீகண்டு
ஆனந்தம் சேர்ந்து எப்போதும்
பாடுவாய் நம்மை என்றான்
பரவுவார் பற்றாய் நின்றான்''

என்று தெய்வச் சேக்கிழார் பெருமான். காரைக்கால் அம்மையாருக்கு ஈசன் திருவருள் புரிந்த சிறப்பினைப் பெரிய புராணத்தில் பாடியிருக்கக் காண்கிறோம்.

காரைக்கால் அம்மையார் பாடியருளிய மூத்த திருப்பதிகம் ''திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்'' என்றே சிறப்பிக்கப்பட்டு வருகின்றது.

ஆளுடைய பிள்ளையார் ஆகிய திருஞானசம்பந்தர் இத்திருத் தலத்திற்கு ஒரு திருப்பதிகமும், ஆளுடைய அரசு ஆகிய திருநாவுக் கரசர் இரு திருப்பதிகங்களும், ஆளுடைய நம்பி ஆகிய சுந்தர மூர்த்தி சுவாமிகள் ஒரு திருப்பதிகமும் பாடியுள்ளமையால் மூவராலும் பாடப்பெற்ற சிறப்புமிக்க திருத்தலமாகத் திருவாலங்காடு திருத்தலம் திகழ்ந்து வருகின்றது.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் ஆற்றும் இறைவன் ஆடல் வல்லானாக ஐந்து திருச்சபைகளில் திருநடனம் புரிகின்றான்.

தில்லை பொன்னம்பலத்தில் அவன் ஆடும் திருநடனம் ஆனந்தத் தாண்டவம் ஆகும். திருவாலங்காட்டில் இரத்தினசபையில் அவன் ஆடும் திருநடனம் ஊர்த்துவ தாண்டவம் ஆகும். மதுரையில் வெள்ளியம்பலத்தில் அவன் ஆடும் திருநடனம் சந்தியா தாண்டவம் ஆகும். திருக்குற்றாலத்தில் சித்திர சபையில் அவன் ஆடும் திரு நடனம், திரிபுரத் தாண்டவம் ஆகும். நெல்லையில் தாமிர சபையில் அவன் ஆடும் திருநடனம் முனிதாண்டவம் ஆகும்.

''ஆலங்காடதனில் அண்டம் உற நிமிர்ந்தாடுகின்ற கோலம் கண்டு'' என்றென்றும் வீற்றிருக்கும் அருள்பேறு பெற்றவர் நம் காரைக்கால் அம்மையார்.

காரைக்கால் அம்மையார் பெற்ற பெரும் பேற்றின் சிறப் பினை எடுத்துக்கூறிட தம்மாலும் ஆகாது என்று பாடுகின்றார் தெய்வச் சேக்கிழார்.

''மடுத்தபுனல் வேணியினார் ''அம்மை'' என மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவிய தாண்டவத்தில் அவர்
எடுத்தருளும் சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றாரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் ஆர் அளவு ஆயினதம்மா!''

என்பது பெரிய புராணம்.

இத்தகைய பெருமைக்குரிய திருவாலங்காடு திருத்தல வரலாற்றினைத் திருக்கோயில் நிர்வாகிகள் சிறப்புற வெளியிடுவது எனக்கு மிகுந்த மன மகிழ்ச்சியைத் தருகின்றது.

''முத்தா முத்தி தரவல்ல
முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங் காட்டும்
சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர்பலர் போற்றும்
பரமா பழையனூர் மேய
அத்தா ஆலங்காடா உன் அடியார்க்கு
அடியேன் ஆவேனே''

என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடிப் பரவசம் கொள்வதைப போன்ற பெருமகிழ்வினைத் திருவாலங்காடு திருத்தல வரலாற்று நூலினைக் காணும்போது யான் பெற்று மகிழ்கின்றேன்.

திருஆலங்காடுறையும் திருவாலங்காட்டு அப்பர் திருவருளையும், இங்குத் திருநடம் புரியும் இரத்தின சபாபதி திருவருளையும், அருள் மிகு வண்டார்குழலி அம்மை திருவருளையும் மெய்யன்பர்கள் பெற்று மகிழ்ந்திட அன்புடன் வேண்டுகின்றேன்.

இத்திருத்தல வரலாற்று நூலைச் சிறப்புடன் வெளியிட்டுள்ள திருத்தணிகை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலய நிர்வாக அதிகாரி / இணை ஆணையாளர் திருமிகு மு.க. பாலசுப்பிரமணியன், பி.ஏ.பி.எல்., அவர்களுக்கும், அறங்காவலர் குழுவினருக்கும் என் நல்வாழ்த்துக்களை அன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்புள்ள,

எஸ். கனகய்யா

# பதிப்புரை

திருத்தணி அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலின் துணைக்கோயிலான திருவாலங்காடு அருள்மிகு வண்டார்குழலி அம்மை உடனுறை ஆலங்காட்டு அப்பர் ஆலய தலவரலாறு தற்போது வெளியிடப் படுகிறது.

மெய்யன்பர்கள் அனைவரும் இந்நூலை வாங்கிப்படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

இவண்,

ஏ.வி. நேதாஜி முதலியார்,
அறங்காவலர் குழுத் தலைவர்,

மு.க. பாலசுப்ரமணியன்,
பி.ஏ., பி.எல்.,
இணை ஆணையர் / செயல் அலுவலர்

அறங்காவலர்கள்:-

ஆ. சுப்பிரமணியம், பி.காம்.
ஆர். வெங்கடேசன்,
ப. வடிவேல்,
மு. நாகன்.

# மெய்யன்பர்களுக்கு வேண்டுகோள்

## அருள்மிகு வடாரணியேசுவரசுவாமி திருக்கோயில், திருஆலங்காடு

★ இத்திருக்கோயிலின் ஒருநாள் (நான்கு காலம்) பூசை செலவுக்கு நிரந்தர கட்டளையாக ரூ. 2500/- அல்லது ஆண்டிற்கு ஒரு நாள் ஒரு கால பூசைக்கு ரூ. 750/- நன்கொடையாக வசூலிக்கப்பட்டு இத்தொகை மூலம் ஓர் ஆண்டில் கிடைக்கும் வட்டியைக் கொண்டு கட்டளைதாரர்கள் விரும்பிய ஒரு நாளில் அவர்கள் குறிப்பிடும் பெயரால் பரம்பரையாக பூசை நடத்தப்படும்.

★ இத்திருக்கோயிலுடன் இணைந்த ஆலங்காட்டுக் காளி அம்மனுக்கு திருவிளக்கு பூசை நடத்த ஏற்பாடுகள் செய்யப் பட்டு வருகிறது. விளக்கு பூசையில் கலந்துகொள்ள கட்டளை தாரர்கள் வரவேற்கப்படுகின்றனர்.

★ இத்திருக்கோயிலுக்கு இலங்கை சீரி மலையில் இருந்து கொண்டுவரப்பட்ட அழகிய "கமலத்தேர்" பழுதடைந்த நிலையில் உள்ளது. இதனைப் புதுப்பிக்கும் திருப்பணிக்காக பக்தர்களிடமிருந்து நன்கொடை வரவேற்க்ப்படுகிறது.

மேற்கண்ட திருப்பணிகளுக்கு காசோலை (அ) மணியார்டர் மூலமாக நன்கொடை அளிக்க விரும்புவோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

இணை ஆணையர்/செயல் அலுவலர்,
அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,
திருத்தணி - 631 209, திருவள்ளூர் மாவட்டம்.

# அணிந்துரை

*மு.க. பாலசுப்ரமணியன்,* பி.ஏ., பி.எல்.,
இணை ஆணையர்/செயல் அலுவலர்

சைவ சமயக் குரவர்களில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் பெருமக்களால் பாடப் பெற்ற சைவத் திருத்தலங்கள் பாடல் பெற்ற தலங்கள் என அழைக்கப்படுகின்றன. தொண்டை நாட்டில் இவ்வாறு 32 பாடல் பெற்ற சைவத் திருத்தலங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றான திருஆலங்காடு என்னும் திருத்தலம் வரலாற்றுச் சிறப்பும், இலக்கியத் தொன்மையும் வாய்ந்தது. சிவ பெருமானின் ஐந்து திருச்சபைகளில் முதற் திருச்சபையான இரத்தின சபை இங்கு அமைந்துள்ளது. காரைக்கால் அம்மை யார் இறைவனிடம் இறவாத அன்பை வேண்டி அவரது திருவடிக் கீழ் என்றும் இருக்கும் பேறுபெற்று மூத்த திருப்பதிகம் பாடியருளிய அற்புத திருத்தலம். நினைத்ததை அளிக்கும் காளி திருக்கோயிலும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று பெருமைகளையும் பெற்று, அழகிய மதிற்சுவர், கோபுரங்கள், வேலைப்பாடு மிக்க 'கமலத் திருத்தேர் ' ஆகியவற்றுடன் வரலாற்றுச் சிறப்புமிக்க நீலி சரிதம் நிகழ்ந்த திருத்தலமாகவும் இது திகழ்கிறது.

இத்தகைய சிறப்புமிக்க திரு ஆலங்காடு திருத்தலத் தின் தல வரலாறு தற்போது இரண்டாவது பதிப்பாக வெளி வருகிறது. இதன் முதற் பதிப்பு 1995 ஆம் ஆண்டு வெளியிடப் பட்டது. காரைக்கால் அம்மையார் அருளிய மூத்த திருப்

பதிகங்களுக்கான விளக்க உரைகளும், வரலாற்றுச் சிறப்பு மிக்க நீலியின் சரிதமும் இவ் இரண்டாம் பதிப்பில் சேர்க்கப் பட்டுள்ளன. இந்நூல் வெளிவர அன்புடன் இசைவு தந்த மாண்புமிகு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை அமைச்சர் பெருந்தகை முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம்.ஏ., பி.எச்.டி., அவர்களுக்கும், துறையின் செயலர் திரு. டி.ஆர். சீனிவாசன், இ.ஆ.ப., அவர்களுக்கும், நமது அற நிலையத்துறை ஆணையர் பெருமதிப்பிற்குரிய திரு. சுகவனேஸ்வர், இ.ஆ.ப., அவர்களுக்கும் உளங்கனிந்த நன்றியையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்டு ஆன்மீக உலகுக்கு அளிக்கும் பொறுப்பும் பேறும் பெற்றமைக்காக நான் தினமும் வணங் கும் எல்லாம் வல்ல திருத்தணிகை முருகனின் திருவடி களைப் பணிந்து வணங்குகிறேன். ஆன்மீக உணர்வுடைய அன்பர்கள் இந்நூலை வாங்கிப் படித்து ஆலங்காட்டு அப்பனின் திருவருளைப் பெற்றுய்ய வேண்டுகிறேன்.

இவண்,

**மு.க. பாலசுப்ரமணியன்**

உ

சிவமயம்

# திருஆலங்காட்டுத் தலவரலாறும் திருப்பதிகங்களும்

தொண்டை நாட்டுப் பாடல்பெற்ற தலங்கள் முப்பத்திரண்டு. அவற்றுள் பதினைந்தாவது தலமாகப் போற்றப் பெறுவது "திருஆலங்காடு".

## இடம்:

இத்தலம் திருவள்ளூர் மாவட்டம், திருத்தணி வட்டத்தில் உள்ளது. இதன் நிருவாகம் திருத்தணி அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலோடு இணைக்கப்பெற்றுள்ளது. சென்னையிலிருந்து திருவள்ளூர்-அரக்கோணம் வழியாகச் சோளிங்கர் செல்லும் பேருந்துகள் இவ்வூர் வழியாகச் செல்லுகின்றன. சென்னையிலிருந்து திருத்தணி செல்லும் பேருந்துகளிலும் காஞ்சிபுரம் - திருவண்ணாமலை - அரக்கோணம் ஆகிய ஊர்களிலிருந்தும் பேருந்துகள் மூலம் இங்குச் செல்லலாம். சென்னை, அரக்கோணம் புகைவண்டித் தொடரில் திருஆலங்காடு இரயில் நிலையத்திலிருந்து வடகிழக்கே 5 கி.மீ. தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## தலப்பெருமை:

இத்தலம் ஆலமரக்காடாயிருந்து அதில் இறைவன் வெளிப்பட்டருளி நடனஞ் செய்தமையால் ஆலங்காடு

எனப்பெயர் பெற்றது. வடமொழியில் இது வடாரணியம் எனப்பெறும். கூத்தபெருமான் நடனஞ்செய்யும் ஐம்பெரும் மன்றங்களுள் இஃது இரத்தின சபை என்று போற்றப் பெறுகிறது. காளியின் பொருட்டு இறைவன் ஊர்த்துவ தாண் டவம் என்னும் தூக்கிய திருவடியை (குஞ்சித பாதத்தை) அண்டமுற தூக்கி அருட்கூத்து செய்த தலம். கார்க்கோ டகர்-முஞ்சிகேசர் (முறையே பதஞ்சலி - வியாக்கிர பாத முனிவர்கள்) ஆகியோர் அனுக்கிரக தாண்டவம் கண்ட தலம். திருக்கயிலையில் அருள்பெற்றவாறே காரைக்காலம்மையார் இத்தலத்திற்குத் தலையால் நடந்து வந்து திருநடனங் கண்டு திருவடிக் கீழ் நின்று ஆடியும், பாடியும் சிவானந்தத்தில் திளைத்துப் போற்றியிருந்து வரும் தலம். காரைக்காலம்மையார் தலையால் நடந்த தலம் ஆதலால் திருஞானசம்பந்தர் இத்தலத்தை மிதித்தற்கு அஞ்சிப் புறத்தே உள்ள பழையனூர் தங்கித் துயிலும் போது இறைவன் நினைப்பிக்க எழுந்து ''துஞ்ச வருவாரும்'' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடி அருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ''அத்தா ஆலங்காடா உன் அடியார்க்கடியேன் ஆவேனே'' எனத் தூரத்தே இருந்து பாடியருளினார். திருநாவுக்கரசு நாயனார் தீர்த்தம் என்பது என்ன என்பதை விளக்கித் தீர்த்தம் ஆடுவதால் நாம் பெறும் பயனை உணர்த்தி உய்தி பெற விளக்கிய தலம்; நீலி செய்த வஞ்சனையால் உயிர் துறந்த வணிகனுக்குத் தாங்கள் கூறிய சொற் பிழையாது பழையனூர் வேளாளர் எழுபது பேரும் செந்தீயில் மூழ்கித் தங்கள் உயிரைக் காட்டிலும் சொன்ன சொல்லே காக்க வேண்டியது என்று வாய்மையைக் காக்க உயிர் கொடுத்த திருத்தலம்.

காரைக்காலம்மையார், பட்டினத்தார், கச்சியப்ப சிவாச்சாரியார், இராமலிங்க சுவாமிகள், பாம்பன் சுவாமிகள்

முதலியோர் பாடிப்பரவிய திருத்தலம். பெரியபுராணம், திருவிளையாடல் புராணம், தொண்டை மண்டல சதகம், பெருந்தொகை முதலிய நூல்களிலும் இதன் சிறப்பைக் காணலாம். ஊர் பழையனூர் என்றும், இறைவன் எழுந்தருளி யுள்ள இடம் ஆலங்காடு என்றும் கூறப்பெறுகின்றன. தற்போது திருக்கோயிலைச் சார்ந்த குடியிருப்புப் பகுதியே திருஆலங்காடு என வழங்கப் பெறுகின்றது. திருஞான சம்பந்தர், திருநாவுக் கரசு நாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவர் திருப்பதிகங்களிலும், இவ்வூர் பழையனூர், ஆலங்காடு, பழனை மேய ஆலங்காடு, பழையனூர் மேய ஆலங்காடு என்றே குறிக்கப்பெறுகிறது.

## கோயில் அமைப்பு:

இத்திருக்கோயில் 6 ஏக்கர் 10 சென்ட் பரப்பிலும், தெற்கு மதில் 599 அடி நீளத்திலும், வடக்கு மதில் 704 அடி நீளத்திலும், மேற்கு மதில் 406 அடி நீளத்திலும் உள்ளன.

திருஆலங்காட்டுத் திருக்கோயில் அழகிய கிராமப் புறச் சூழலோடு விளங்குகின்றது. திருக்கோயில் கிழக்கி நோக்கிய சந்நிதி உடையது; ஐந்து நிலைகளை உடைய தலைக்கோபுரம் கொண்டது உள்ளே சென்றால் இடப் பக்கத்தில் சித்தி விநாயகர் திருக்கோயில், அடுத்து உள்ளே சென்றால் தென்முகம் நோக்கி எண்தோள் வீசியாடும் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் சந்நிதி. இரத்தின சபை, கூத்தப்பிரானின் திருவடி நிழலில் காரைக்காலம்மையாரின் திருவுருவம். உப்பிரகார வாயிலில் வடக்கு நோக்கிய நிலை யில் திருஆலங்காட்டுக்காளி உற்சவ மூர்த்தி; மூலத்தான மூர்த்தியான சிவலிங்கப் பெருமான் ''தேவர்சிங்கப்

பெருமான்'' என்ற பெயரில் விளங்குகிறார். திருக்கோயில் உட்பிரகாரத்தில் அகோர வீரபத்திரர் நின்ற திருக்கோலத்தில் மிகப் பெரிய மூர்த்தியாகக் காட்சியளிக்கிறார். இதே வரிசை யில் நால்வர் பெருமக்கள், காரைக்காலம்மையார் (மூல மூர்த்தி) ஆகிய திருவுருவங்கள் உள்ளன. அம்மன் திருக் கோயில் வெளிப் பிரகாரத்தில் தெற்கு நோக்கிய நிலையில் தனிக்கோயிலாக உள்ளது. மேற்கே முத்தித் தீர்த்தத் திருக் குளம் (சென்றாடு தீர்த்தம்) இதனைச் சார்ந்து கீழ்க்கரையில் ஆலங்காட்டுக் காளி திருக்கோயில் ஆகியன அமைந்துள்ளன.

## *மூர்த்திகள்:*

### இறைவன் பெயர்

ஆலங்காட்டப்பர்: தேவர்சிங்கப் பெருமான்; வடா ரண்யேசுவரர்.

''சிவனே தேவர் சிங்கமே'' - சுந்தரர்

''அத்தா ஆலங்காடா உன் அடியார்க்கடியேன் ஆவேனே'' - சுந்தரர்

### அம்பிகை திருப்பெயர் - வண்டார் குழலியம்மை

''வண்டார் குழலியுமை நங்கை பங்கா'' - சுந்தரர் தேவாரம்

நடராசர் எண்டோள் கொண்ட ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி

காரைக்காலம்மையார் திருவுருவம் இம்மூர்த்தியின் திருவடியில் உள்ளது.



அருள்மிகு சிவகாமசுந்தரி

அருள்மிகுபத்திரகாளி அம்மன் திருக்கோயில் - தீர்த்தக் கரையின் வடகீழ்ப் பகுதியிலுள்ளது.

தீர்த்தம் - முக்தி தீர்த்தம் - ''சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே'' என்பது அப்பர் திருவாக்கு.

## தலமரம் - பலா - ஆல்

திருக்கோயிலின் கருவறைக் கோயிலும் சில திருப் பணிகளும் சோழப் பேரரசர்களாலும் 1300 ஆண்டுகளுக்கு முன்னர் இரண்டாம் திருமதிலும் கோபுரமும் பல்லவ அரசர் களாலும், மூன்றாம் மதிலும் கோபுரமும் திருகுளத்துப் படித்துறையும் சுமார் 850 ஆண்டுகளுக்கு முன்னர் பழியஞ்சிய பல்லவராயன் என்பவராலும் கட்டப்பெற்றன. 1906 - 1914 கோட்டையூர் பெ.மு.அ. அவர்களால் இப்பொழுது காணப் பெறும் புதுத்திருப்பணிகள் நடந்து, தனித்தனி கோயில்களாக இருந்தவை மாறி ஒருபெரும் கோயிலாகக் காட்சியளிக் கின்றது.

## முஞ்சிகேச முனிவர் - கார்க்கோடகன்

திருக்கயிலையில் தவம் செய்து கொண்டிருந்த அனந்த முனிவருக்கு இறைவன் வெளிப்பட்டார்; ''யாது வரம் வேண்டும்?'' எனக் கேட்டார். அதற்கு முனிவர், ''பெருமானே! உமது இடையறாத திருநடனத்தினால் தான் உலகம் இயங்கு கிறது என்பதை உலகவர்க்கு உணர்த்தும் திருநடனத்தை அடியேன் பொருட்டுச் செய்தருள வேண்டும்'' என வேண்ட, அதற்கு இறைவன், ''திருவாலங்காட்டிற்குச் சென்று தவம் செய்தால் அங்கு வந்து உன் கருத்தை முற்றுவிப்போம்'' என உரைத்தருளினார். அவ்வாறே அனந்த முனிவர் இத்தலத்திற்கு

வந்து தவம் செய்து கொண்டிருந்தார். இவர் மேல் புற்று மூடியது. முடி மீது முஞ்சல் (நாணல்) முளைத்தது. அதனால் அனந்த முனிவர் முஞ்சிகேசர் எனும் பெயர் பெற்றார்.

பெருமான் திருக்கரத்தில் விளங்கும் கார்க்கோடகன் என்ற பாம்பு ஒருநாள் இறைவன் திருக்கரத்தில் நஞ்சைக் கக்கியது. அக்குற்றத்திற்காக இறைவன் அத்தனைத் திருவாலங் காடடைந்து தவம் செய்யுமாறு பணித்தார். அதன்படியே கார்க்கோடகனும் திருவாலங்காட்டை அடைந்து தவம் செய்து திருநடனம் கண்டு வருகின்றது.

## பஞ்ச சபைகள்

### (நடராசப் பெருமான் அருட் கூத்தியற்றும் சபைகள் ஐந்து)

1) இரத்தின சபை - திருவாலங்காடு - அனுக்கிரக தாண்டவம் (ஊர்த்துவ தாண்டவம்)

2) கனகசபை - பொன்னம்பலம் - ஆனந்ததாண்டவம் (சிதம்பரம்)

3) வெள்ளி அம்பலம் - மதுரை - சந்தியா தாண்டவம் (கால் மாறி ஆடிய தாண்டவம்)

4) தாமிர சபை - திருநெல்வேலி - முனி தாண்டவம்

5) சித்திர சபை - திருக்குற்றாலம் - திரிபுர தாண்டவம்

இவ்வைந்து சபைகளுள் முதன்மையாக விளங்குவது இரத்தின சபையான திருஆலங்காடு ஆகும். இத்தலம்

காலத்தால் சிதம்பரத்திற்கும் முற்பட்டது என்பதை கோயில் புராணம் பேசுகிறது.

இவ்வைந்து சபைகளிலும் இறைவன் திருக்கூத்து ஆடியதற்காகிய காரணங்களை அந்தந்த தலபுராணங்கள் விரிவாகப் பேசுகின்றன. திருவாலங்காட்டில் இறைவன் ஊர்த்துவ தாண்டவம் ஆடியதற்கு முஞ்சிகேச முனிவர், கார்க்கோடகன், காளி, காரைக்காலம்மையார் ஆகியோர் காரணம் எனப்படுகிறது.

## காரைக்காலம்மையார் வரலாறு

தனதத்தர் எனும் காரைக்கால் வணிகர் செய்தவத்தினால் அவதரித்தவரும், புனிதவதியார் என்ற இயற்பெயரினரும், பிறந்து மொழி பயின்ற பின் எல்லாம் விடையவன் பால் மிக்க அன்பு பூண்டவரும், நாகை நீதிபதி மைந்தன் பரமதத்தனை மணம் புரிந்தவரும் ஒரு நாள் பரமதத்தன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டில் ஒன்றை அடியார்க்குப் படைத்து மற்றொன்றைப் பின் கணவர்க்குப் படைக்க அக்கனியின் சுவை மிகுதியால் கணவன் பிறிதொன்றையும் கேட்க, ஈசனருளால் அதிமதுரக் கனியொன்றைப் பெற்றுக் கணவனுக்குப் படைக்க, அக்கனியின் தனிப்பெரும் சுவை மிகுதியால் ''இது உலகத்து எங்கும் கிடைக்கப் பெறாதது. எப்படி பெற்றாய்'' என்று கணவன் வினவ அம்மை இறைவன் அருளால் பெற்ற முறையை உள்ளவாறு சொல்ல, ''இறையருளால் பெற்றதென்றால் மற்றொன்று பெற்றுவா'' என்று கூறக் கணவனின் ஐயத்தைப் போக்க மற்றொரு கனியை வேண்டிப் பெற்றவரும் கணவன் இது கண்டு அஞ்சி அகன்றமையினால், ''ஈங்கியவன் குறித்த கொள்கை இது;

இனி இவனுக்காகத் தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங்குன்பால் ஆங்கு நின் தாள்கள் போற்றும் பேய் வடி(வு) அடியேனுக்குப் பாங்குற வேண்டும்'' என்று இறையருளினாலே ''வனப்பை எல்லாம் உதறி எற்பே உடம்பாக வானமும் மண்ணும் வணங்கப் பேய் வடிவு ஆனவரும், அப்பொழுதே அற்புதத் திருவந்தாதி, இரட்டை மணிமாலையும் அருளிக் கயிலை நோக்கித் தலையினால் நடந்து சென்றவரும், சிவபெருமான் ''வரும் இவள் நம்மைப் பேணும் அம்மை'' என்று அருளப் பெற்றவரும் ''இறவாத அன்பு வேண்டிப் பின் பிறவாமை வேண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்துபாடி அறவா நீ ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க'' என்று வரம் வேண்டியவரும், அங்ஙனமே அருளப் பெற்று திருஆலங்காட்டுக்குத் தலையாலே போந்து மூத்த திருப்பதிகம் அருளி, அண்டமுற நிமிர்ந்தாடும் அமலன் சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றவருமாகிய காரைக்காலம்மை யாராலும் புகழ் பெற்ற திருப்பதி இத்திருஆலங்காடு.

**ஆடினார் காளி காண:**

சும்பன், நிசும்பன் என்ற இரு அசுரர்கள் ஆலவனத்தில் தங்கிக் கொண்டு தேவர், முனிவர், மக்கள் முதலிய எல்லோருக்கும் இடர் விளைவித்து வந்தனர். முனிவர்களும் தேவர்களும் இறைவனிடம் சென்று முறையிட்டனர். தேவி இரக்கமுற்றுத் தமது திருக்கண் பார்வையிலிருந்து காளியைத் தோற்றுவித்துக் காளிப்படைகளுடன் தானும் சூலபாணியாகச் சென்று அவர்களுடன் போரிட்டு அவர்களை ஒடுக்கிக் காளியை ஆலவனத்திற்குத் தலைவியாக்கிக் கயிலை மீண்டார். அசுரர்களின் குருதியை உண்ட வெறியினால் காளி

கோரச் செயல்கள் பல புரியத் தொடங்கினாள். இவற்றைக் கண்ட நாரதர் திருக்கயிலை சென்று இறைவனிடம் தெரிவித்தார். பெருமான் தமது தொன்மைக் கோலங்களில் ஒன்றாகிய கோர வடிவம் பூண்டு சூலபாணியாகச் சிவகணங்களுடன் ஆலங்காட்டை அடைந்தார்.

சிவபெருமானின் அகோர வடிவம் கண்டு அஞ்சிய காளி அவரைச் சூழ்ச்சியால் வெல்ல எண்ணி, ''நீர் என்னுடன் நிருத்தம் செய்து வெற்றி பெற்றால் இவ்வாலவனத்தில் நீர் அரசாளலாம்'' என்றாள். அதற்கிசைந்த பெருமான் திருமால், பிரமன் முதலியோர் வாத்தியங்கள் வாசிக்கப் பார்வதி தேவியார் சபாநாயகியாக வீற்றிருக்க, முஞ்சிகேச முனிவர், கார்க்கோடகன் முதலியோர் தரிசிக்க, நடனங்கள் பலவற்றைக் காளியுடன் நிகழ்த்திக் கடைசியாக ஊர்த்துவ தாண்டவம் செய்தருளினார். அப்பொழுது காதில் இருந்த மணிக்குழைகளில் ஒன்றைக் கீழே வீழ்த்திப் பின் அதனைப் பெருமான் இடக்கால் பெருவிரலால் எடுத்துத் தன் காதில் பொருத்திக் கொண்டு ஊர்த்துவ தாண்டவம் ஆடினார். முடியாமையால் மயக்கமுற்ற காளி தோற்றாள். இறைவன் நம்மையன்றி உனக்குச் சமம் வேறொருவர் இன்மையால் நமது இடப் பாகத்திலிருக்க, என்றருளி ''நம்மை வழிபடுவோர் உன்னை முதலில் வழிபட்டுப் பின்னர் நம்மை வழிபாடு செய்தால் தான் பூரண பலனை அடைவர்'' என வரமருளினார். முஞ்சி கேசருக்கும் கார்க்கோடகனுக்கும் எப்பொழுதும் தம்மைத் தரிசித்துக்கொண்டு தமது சந்நிதியில் இருக்கும் பேற்றை அருளினார்.

இறைவன் இத்தலத்தில் காளியுடன் ஆடிய திருநடனத்தைக் குறிப்பிட்டு, ''ஆடினார் காளி காண ஆலங்காட்டு அடிகளாரே'' என அப்பரும் பாடியுள்ளார்.

மார்கழித் திருவாதிரையில் இறைவன் முஞ்சிகேச ருக்கும், கார்க்கோடகனுக்கும் நடன தரிசனம் கொடுத்தருள் கின்றார். முஞ்சிகேசரை வியாக்ரபாதர் எனவும், கார்க்கோட கனைப் பதஞ்சலி முனிவர் எனவும் கூறுகின்றனர்.

**கல்வெட்டுச் சான்றுகள்:**

திருஆலங்காடு சமய இலக்கியச் சிறப்பு, புராணச் சிறப்பு, ஆகிய இவற்றோடு வரலாற்றுச் சிறப்பும் பெற்றது. இதன் வரலாற்றுச் சிறப்புகளை அறிய ஆதாரமாக 46 கல்வெட் டுக்களும் 31 செப்பேடுகளும் கிடைத்துள்ளன. இவை கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் முதலாம் இராசேந்திரன் காலத்தில் (கி.பி. 1012-1044) வெளியிடப் பெற்றவை (LEXDEN) பல்கலைக் கழக தொல்பொருள் கூடத்தில் உள்ள (LARGE LEXDEN GRANT) விரிந்த லெய்டன் சாசனம் மற்றும் அன்னமங்கலம் சாசனம் என வழங்கும் சாசனங்களுடன் ஒப்பிடும் அளவுக்கு இவை சிறப்பு வாய்ந்தவை என்று வரலாற்று வல்லுநர்களால் போற்றப்பெறுகின்றது.

இக்கல்வெட்டுகள், ஆலங்காடுறையும் பெருமா னுக்குப் பேரரசர்கள் செய்த திருப்பணிகளையும் குறிப்பாகச் சோழப் பேரரசர்கள், பாண்டிய மன்னர்கள், பல்லவ மன்னர் கள், விஜயநகர அரசர்கள் இத்திருக்கோயிலுக்குச் செய்த திருப்பணிகளையும், பேரறங்களையும், வெற்றிகளையும் தெரிவிக்கின்றன.

கல்வெட்டுக்களில் இத்தலம் 'மணவிற்கோட்டத்து மேல் மாலை பழையனூர் நாட்டுத் திருஆலங்காடு'' என்றும், ''ஜெயங்கொண்ட சோழமண்டலத்து மேல் மாலையாகிய பழையனூர் நாட்டுத் திருஆலங்காடு'' என்றும் வழங்கப் பெறுகின்றன.

உ

சிவமயம்

# திருஆலங்காட்டுத் திருப்பதிகங்கள்

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

### 1. திருப்பதிக வரலாறு

புகலியாண்டகையார் தக்கோலம் என்னும் திருத் தலத்தை அடைந்து திருஊறலை வணங்கிப் பதிகம்பாடிப் பழையனூர்த் திருஆலங்காட்டிற்கு அருகே வருகின்றார்கள். அப்போது இத்தலம் எம்மையாளும் அம்மை திருத்தலை யாலே நடந்து போற்றும் அம்மையப்பரின் அணிநகரல்லவா! என்ற எண்ணம் உண்டாயிற்று. அதனை மிதிக்க அஞ்சி அடுத்துள்ள ஊரிற் சென்று இரவு பள்ளிகொண்டார்கள். இடையாமத்திலே பிள்ளையார் கனவிலே பெருமானும் எழுந்தருளி 'எம்மைப்பாட மறந்தனையோ' என்று அருளிச் செய்தனர். அதனை உணர்ந்த பிள்ளையார் வியந்தெழுந்து கருணையைப் போற்றித் 'துஞ்ச வருவாரும்' என்ற இத்திருப் பதிகத்தை அருளிச் செய்தார்கள். இதில் பழையனூர் நீலி வரலாற்றை முதல் திருப்பாடலிலும், கனவில் வந்தருளிச் செய்ததை ஏழாந்திருப்பாடல்களிலும் சிறப்பித்திருக்கிறார் கள். இச்செய்தியை மறுநாட் காலையில் எல்லாருக்கும் அறிவித்துத் திருஆலங்காடு சென்று ஆலயங்காட்டப்பரை வழிபட்டுத் திருப்பாசூருக்கு வழிக்கொண்டார்கள்.

## பண் - தக்கராகம்

## திருச்சிற்றம்பலம்

துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 1

கேடும்பிறவியு மாக்கினாருங் கேடிலா
வீடுமாநெறி விளம்பினாரெம் விகிர்தனார்
காடுஞ்சுடலையுங் கைகொண்டெல்லிக் கணப்பேயோ
டாடும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 2

1. அந்தணன் ஒருவனால் வஞ்சனையாகக் கொல்லப்பட்ட அவன் மனைவி மறுபிறவியில் வணிகனாகப் பிறந்திருந்த தன் கணவனைப் பேயுருவில் சென்று அவனது வாணாளைக் கவர அவனுக்குப் பிணைகொடுத்த வேளாளர் எழுபதின்மர் தீப்பாய்ந்திறந்த செய்திகேட்டு அனைவரும் அஞ்சும் வரலாறு நிகழ்ந்த ஆலங்காட்டிறைவர், முன்னரே நட்பினை உடையார் போல் துஞ்சும்போது கனவில் வருவார் தன்னைத் தொழுமாறு செய்வார். மறைவாக நெஞ்சில் புகுந்து நின்று தன்னை நினையுமாறு செய்வார்.

2. இடுகாட்டை இடமாகக் கொண்டு இரவில் பேய்க் கணங்களோடு ஆடும் பழையனூர் ஆலங்காட்டிறைவராகிய எம்விகிர்தர் தோற்ற நகரங்களைத் தந்ததோடு மேலான வீட்டு நெறியையும் படைத்தவராவார்.

கந்தங்கமழ்கொன்றைக் கண்ணிசூடிக் கனலாடி
வெந்தபொடிநீற்றை விளங்கப்பூசும் விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலை யரவிற்றோன்றிக் கோடல்பூத்
தந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 3

பாலமதிசென்னி படரச்சூடிப் பழியோராக்
காலனுயிர்செற்ற காலனாய கருத்தனார்
கோலம்பொழிற்சோலைப் பெடையோடாடி மடமஞ்ஞை
ஆலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே 4

ஈர்க்கும்புனல்சூடி யிளவெண்டிங்கண் முதிரவே
பார்க்குமரவம்பூண் டாடிவேடம் பயின்றாரும்
கார்க்கொள்கொடிமுல்லை குருந்தமேறிக் கருந்தேன் மொய்த்
தார்க்கும் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 5

3. பூங்கொத்துகள் நிறைந்த பொழிலகத்தே பாம்பு போலக் காந்தள் மலரும் வளம் சார்ந்த பழையனூர் ஆலங் காட்டடிகள், கொன்றைக் கண்ணிசூடிக்கனலாடித் திருநீற்றை விளக்கப் பூசும் விகிர்தர் ஆவார்.

4. அழகிய பொழிலகத்தே மயில்கள் பெடையோடு ஆடி ஆரவாரிக்கும் பழையனூர் ஆலங்காட்டடிகள் இளம் பிறையை முடிமேல் சூடியவர். பழிபாராது காலனது உயிரைக் கவர்ந்த காலகாலர். அனைவர்க்கும் தலைவர்.

5. கார்காலத்தே தழைக்கும் முல்லைக்கொடிகள் குருந்த மரங்களின் மீது ஏறிப் படர்ந்து மலர, வண்டுகள் அம்மலர் களை மொய்த்து ஆரவாரிக்கும் பழையனூர் ஆலங்காட்டு அடிகள், கங்கையைச் சூடியவர், விழுங்குவதற்கு இளம் பிறையின் வளர்ச்சியை எதிர்பார்த்திருக்கும் பாம்பை அணிந்து ஆடுபவர். பல்வேறு கோலங்களைக் கொள்பவர்.

பறையுஞ் சிறுகுழலும் யாழும்பூதம் பயிற்றவே
மறையும்பலபாடி மயானத்துறையு மைந்தனார்
பிறையும்பெரும்புனல்சேர் சடையினாரும் பேடைவண்
டறையும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 6

நுணங்குமறைபாடி யாடிவேடம் பயின்றாரும்
இணங்குமலைமகளோ டிருகூறொன்றா யிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர்வைகலேத்தும் வாழ்த்துக்கேட்
டணங்கும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 7

கணையும்வரிசிலையு மெரியுங்கூடிக் கவர்ந்துண்ண
இணையிலெயின்மூன்று மெரித்திட்டாரெம் மிறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங் கலையுமெல்லாங் கங்குல்சேர்ந்
தணையும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 8

6. பெண் வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்த பழையனூர் ஆலங்காட்டு அடிகள், பறை, யாழ், குழல் முதலியவற்றைப் பூதகணங்கள் வாசிக்க, வேதங்களைப் பாடிக்கொண்டு மயானத்திலுறையும் செல்வர் ஆவார். பிறை, கங்கை ஆகியவற்றை முடிமீது சூடியவராக விளங்குவார்.

7. தங்களைச் சிறியவர்களாக எண்ணும் தொண்டர்கள் நாள்தோறும் வணங்கி ஏத்தி வாழ்த்தும் ஒலிகேட்டு தெய்வத் தன்மை மிக்கிருப்பதாகிய பழையனூர் ஆலங்காட்டில் உறையும் இறைவர், நுண்ணியதான வேத கீதங்களைப்பாடி ஆடுபவர்; பல்வேறு கோலங்கள் கொள்பவர்; உமையும் தானுமாய் ஒருடலில் இருவேறு வடிவங்களில் இசைந்து நிற்பவர்.

8. பெண்ணும் ஆணும் அவற்றின் குட்டிகளுமாய் மானினங்கள் இரவுப்போதில் அச்சமின்றி வந்தடையும் பழையனூர் ஆலங்காட்டு இறைவர், முப்புரங்களை வில், அம்பு, தீ ஆகியன கூட்டி எரிக்கச் செய்த எம் இறைவராவார்.

கவிழமலைதரளக் கடகக்கையா லெடுத்தான்றோள்
பழநுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்
தவழுங்கொடிமுல்லை புறவஞ்சேர நறவம்பூத்
தவிழும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 9

பகலுமிரவுஞ்சேர் பண்பினாரு நண்போரா
திகலுமிருவர்க்கு மெரியாய்த்தோன்றி நிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடு வல்லார்க்கென்றுந் தீயபோய்
அகலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 10

9. முல்லைக்கொடிகள் தவழ்ந்து படர்ந்து மலரும் காடுகள் சூழ்ந்த பழையனூர் ஆலங்காட்டு அடிகள் முத்துக்கடகம் செறிந்த கைகளால் கயிலை மலையைக் கவிழுமாறு தூக்க முயன்ற இராவணனது தோள்களைப் பவழம்போலும் விரல் நுனியினால் பைய ஊன்றி நெரித்துப் பின் அருள்செய்த பெருமானாவார்.

10. ஆகமங்களில் புகலும் விதிகளால் வழிபடும் அடியவர்களின் தீமைகளை அகல்விக்கும் பழையனூர் ஆலங்காட்டு அடிகள் இரவுபகல் போன்ற நிறங்களை உடையோரும் தந்தை மகன் என்ற முறை ஓராது தம்முள் இகலியவருமாகிய திருமால், பிரமர் அடிமுடி தேடி இளைக்கு மளவு அனலுருவாய் நிமிர்ந்தவர்.

போழம்பலபேசிப் போதுசாற்றித் திரிவாரும்
வேழம்வருமளவும் வெயிலேதுற்றித் திரிவாரும்
கேழல்வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா
ஆழ்வர்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 11

சாந்தங்கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்தன்
ஆந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளை
வேந்தனருளாலே விரித்தபாட லிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே. 12

திருச்சிற்றம்பலம்

11. கேடற்ற பழையனூர் ஆலங்காட்டில் உறையும் இறைவர் நம்மைக் கெழுவும் வினைகள் போக அறநூற் கருத்துக்களைக் கேட்பிப்பார். அவரை விடுத்து மாறுபட்டன பேசித்திரியும் சமணரும், பசிவரும் அளவும் வெயிலில் திரியும் பவுத்தரும் கூறும் உரைகளைக் கொள்ளேல்.

12. சந்தன மணம் கமழும் திருவீதிகளைக் கொண்ட சண்பை ஞானசம்பந்தர் பழையனூர் ஆலங்காட்டு அடிகளைப் போற்றிப் பாடிய இப்பதிகப் பாடல்களை இறைவனருளாலே விரித்துப் பாடவல்லவர் தாம் சேர்ந்த இடங்களிலெல்லாம், புனிதத் தன்மையைப் பெறுவார்கள்.

# திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியன

## 2. திருப்பதிக வரலாறு

மெய்மை நிலை வழுவாத மேன்மை நெறி விழுக்குடிமைச் செம்மையினார் பழையனூர்த் திருவாலங்காட்டிறைவனைப் பணிந்து பாடியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம் *(புராணம் 341-2)*

திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

*வெள்ளநீர்ச் சடையர்போலும் விரும்புவார்க் கெளியர்-போலும்*
*உள்ளுளே யுருகிநின்றங் குகப்பவர்க் கன்பர்போலும்*
*கள்ளமே வினைகளெல்லாங் கரிசறுத் திடுவர்போலும்*
*அள்ளலம் பழனைமேய வாலங்காட் டடிகளாரே.* 1

*செந்தழ லுருவர்போலுஞ் சினவிடை யுடையர்போலும்,*
*வெந்தவெ ணீறுகொண்டு மெய்க்கணிந் திடுவர்போலும்*
*மந்தமாம் பொழிற்பழனை மல்கிய வள்ளல்போலும்*
*அந்தமி லடிகள்போலு மாலங்காட் டடிகளாரே.* 2

*1.* வயல் வளம் சான்ற பழையனூர்த் திருஆலங்காட்டு அடிகள் கங்கை சூடிய சடையர்; விரும்புவார்க்கு எளியர். உளம் உருகி உகப்பவர்க்கு அன்பர்; மறைவாக நின்று அச்சம் தரும் வினைகள் முழுவதையும் தீர்ப்பவர்.

2. தென்றல் உலவும் பழையனூர் வள்ளலாகிய திருஆலங்காட்டு அடிகள் செந்தீ வண்ணர். சினவிடை உடையவர். திருவெண்ணீற்றைத் திருமேனியில் அணிந்திருப்பவர். அழிவற்றவர்.

கண்ணினாற் காமவேளைக் கனலெழ விழிப்பர்போலும்
எண்ணிலார் புரங்கண்மூன்று மெரியுணச் சிரிப்பர் போலும்
பண்ணினார் முழவமோவாப் பைம்பொழிற் பழனைமேய
அண்ணலா ரெம்மையாளு மாலங்காட் டடிகளாரே. 3

காறிடு விடத்தையுண்ட கண்டரெண் டோளர்போலும்
தூறிடு சுடலைதன்னிற் சுண்ணவெண் ணீற்றர்போலும்
கூறிடு முருவர்போலுங் குளிர்பொழிற் பழனைமேய
ஆறிடு சடையர்போலு மலாங்காட் டடிகளாரே. 4

பார்த்தனோ டமர்பொருது பத்திமை காண்பர்போலும்
கூர்த்தவா யம்புகோத்துக் குணங்களை யறிவர்போலும்
பேர்த்துமோ ராவநாழி யம்பொடுங் கொடுப்பர்போலும்
தீர்த்தமாம் பழனைமேய திருவாலங் காடனாரே. 5

3. பண்ணிசைக்குத்தக முழவு முழங்கும் பொழில் சூழ்ந்த பழையனூர் அண்ணலாகிய திருவாலங்காட்டில் உறையும் எம்மை ஆளும் அடிகள் கண்ணால் காமனைக் கனலெழ விழித்து அழித்தவர். திரிபுரத்தசுரர்களின் முப்புரங் களை எரியுண்ணச் சிரித்தவர்.

4. குளிர் பொழில் சூழ்ந்த பழையனூர்த் திரு வாலங்காட்டு அடிகள் கொல்லும் நஞ்சை உண்ட கண்டர். எண்தோளர்; சுடலையில் உள்ள நீற்றினைப் பூசியவர்; மாதொருகூறர்.

5. தூயதான பழையனூர்த் திருவாலங்காட்டு இறைவர் அருச்சுனனோடு அமர்பொருதும் போது அருச்சுனன் மீது கூரிய அம்புகளைக் கோத்தும் அவனது குணங்களையும் பத்திமைகளையும் அறிந்து அவனுக்கு அம்பறாத் தூணியைப் பாசுபதா ஸ்திரத்துடன் வழங்கியவரும் ஆவார்.

வீட்டினார் சுடுவெண்ணீறு மெய்க்கணிந் திடுவர்போலும்
காட்டினின் றாடல்பேணுங் கருத்தினை யுடையர்போலும்
பாட்டினார் முழவமோவாப் பைம்பொழிற் பழனை மேயார்
ஆட்டினா ரரவந்தன்னை யாலங்காட் டடிகளாரே. 6

தாளுடைச் செங்கமலத் தடங்கொள்சே வடியர்போலும்
நாளுடைக் காலன்வீழ வுதைசெய்த நம்பர்போலும்
கோளுடைப் பிறவிதீர்ப்பர் குளிர்பொழிற் பழனைமேய
ஆளுடை யண்ணல்போலும் ஆலங்காட் டடிகளாரே. 7

கூடினா ருமைதனோடே குறிப்புடை வேடங்கொண்டு
சூடினார் கங்கையாளைச் சுவறிடு சடையர்போலும்
பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனைமேயார்
ஆடினார் காளிகாண வாலங்காட் டடிகளாரே. 8

6. பாட்டும் முழவும் முழங்கும் பழையனூர்த் திருவாலங்காட்டு அடிகள் இறந்தவர்களை எரித்ததாலுண் டான வெண்ணீற்றைத் திருமேனி மீது பூசிக்கொள்பவர். இடுகாட்டில் ஆடும் கருத்துடையவர். அரவைப் பிடித்து ஆட்டுபவர்.

7. குளிர் பொழில் சூழ்ந்த பழையனூர்த் திருவாலங்காட்டு அடிகள் செந்தாமரை மலர் போன்ற பெருமை பொருந்திய சேவடிகளை உடையவர். வாழ்நாளைக் கணிக்கும் காலன் வீழுமாறு உதைத்தவர். குற்றம் பொருந்திய பிறவியைத் தீர்ப்பவர். என்னை ஆளாகக் கொண்டவர்.

8. பைம்பொழில் சூழ்ந்த பழனையைச் சார்ந்த திருவாலங்காட்டு அடிகள் காதற்குறிப்புடைய கோலத்தோடு உமையம்மையைக் கூடியிருப்பவர். கடுத்துவந்த கங்கையைச் சடையில் தாங்கிச் சுவறச் செய்தவர். சாமவேதம் பாடியவர். காளிகாண ஆடியவர்.

வெற்றரைச் சமணரோடு விலையுடைக் கூறை போர்க்கும்
ஒற்றரைச் சொற்கள்கொள்ளார் குணங்களை யுகப்பர் போலும்
பெற்றமே யுகந்தங்கேறும் பெருமையை யுடையர் போலும்
அற்றங்க ளறிவர்போலு மாலங்காட் டடிகளாரே. 9

மத்தனாய் மலையெடுத்த அரக்கனைக் கரத்தோடொல்க
ஒத்தினார் திருவிரலா லூன்றியிட் டருள்வர்போலும்
பத்தர்தம் பாவந்தீர்க்கும் பைம்பொழிற் பழனைமேய
அத்தனார் நம்மையாள்வா ராலங்காட் டடிகளாரே 10

திருச்சிற்றம்பலம்

9. திருவாலங்காட்டு அடிகள் ஆடையின்றித் திரியும் சமணரும், வெள்ளாடை போர்த்துத் திரியும் சமணரும் கூறும் பொய்யுரைகளைக் கொள்ளாதவர்களின் குணங்களை உகப்பவர். விடையை விரும்பி ஊர்ந்துவரும் பெருமையர். நாம் மறைவாகச் செய்யும் பாவங்களை அறிபவர்.

10. பைம்பொழில் சூழ்ந்த பழையனூர் திருவாலங்காட்டு அடிகள், உன்மத்தனாய்க் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த இராவணனின் இருபது கரங்களும் தளர் வெய்துமாறு கால் விரலை ஊன்றி நெரித்துப் பின் அருள் செய்தவர். பக்தர்களின் பாவங்களைத் தீர்ப்பவர்.

## 3. திருப்பதிக வரலாறு

வாகீசர், திருவொற்றியூர், திருப்பாசூர் முதலான பதிகளை வணங்கித் திருஆலங்காடு சென்று பணிந்து பாடியருளியவற்றுள் ஒன்று இத்திருப்பதிகம்.

(திருநாவுக். பு. 342)

### திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

ஒன்றா வுலகனைத்து மானார் தாமே
ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கும் நிமிர்ந்தார் தாமே
நீர்வளிதீ யாகாச மானார் தாமே
கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே
கோலப் பழனை உடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

1. திருவாலங்காடுடைய செல்வர், முன்னர்த் தாமாகிய ஒரு பொருளாய் நின்று பின்னர் உலகப் பொருள்கள் பலவும் ஆனவர். ஊழிதோறும் உயர்ந்தவராய் விளங்குபவர். எங்கும் பரவி நிற்பவர். ஐம்பூத வடிவானவர். கூற்றை உதைத்தவர். அழகிய பழையனூரை உடையவர். தலங்கள் தோறும் தீர்த்தங்களாக விளங்குபவர்.

மலைமகளைப் பாக மமர்ந்தார் தாமே
வானோர் வணங்கப் படுவார் தாமே
சலமகளைச் செஞ்சடைமேல் வைத்தார் தாமே
சரணென் றிருப்பார்கட் கன்பர் தாமே
பலபலவும் வேடங்க ளானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சிலைமலையா மூவெயிலும் அட்டார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே 2

ஆவுற்ற ஐந்தும் உகந்தார் தாமே
அளவில் பெருமை யுடையார் தாமே
பூவுற்ற நாற்றமாய் நின்றார் தாமே
புனிதப் பொருளாகி நின்றார் தாமே
பாவுற்ற பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேவுற் றடிபரவ நின்றார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 3

2. திருவாலங்காடுடைய செல்வர் உமைபாகர். வானோரால் வணங்கப்படுபவர். கங்கையைச் சடைமுடியில் சூடியவர். சரணாக அடைந்தவர்கட்கு அன்பர். பற்பல திருக் கோலங்களைக் கொண்டவர். பழையனூரைப் பதியாக உடையவர். மேருமலையை வில்லாகக் கொண்டு திரிபுரங்களை எரித்தவர்.

3. திருவாலாங்காடுடைய செல்வர் ஆனைந் தாடுபவர். அளவற்ற பெருமையை உடையவர். பூவின் மணமாய் நிற்பவர். புனிதப் பொருளானவர். பாவடிவிலுள்ள பாடல்களை உகப்பவர். பழையனூரைப் பதியாகக் கொண் டவர். தேவர்பலரும் வந்து அடிபரவ நிற்பவர்.

நாறுபூங் கொன்றை முடியார் தாமே
நான்மறையோ டாறங்கஞ் சொன்னார் தாமே
மாறிலா மேனி யுடையார் தாமே
மாமதியஞ் செஞ்சடைமேல் வைத்தார் தாமே.
பாறினார் வெண்டலையி லுண்டார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேறினார் சித்தத் திருந்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே




அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியுஞ் சந்தியு மானார் தாமே
சொல்லும் பொருளெலா மானார் தாமே
தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே
பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே 5

4. திருவாலங்காடுடைய செல்வர், கொன்றை யணிந்த முடியினர். நான்மறை ஆறங்கம் ஓதியவர். அழியாத திருமேனியைக் கொண்டவர். மதி சூடியவர். இறந்தவர் தலையோட்டில் உண்பவர். பழையனூரைப் பதியாக உடையவர். தெளிந்தவர் உள்ளத்தில் இருப்பவர்.

5. திருவாலங்காடுடைய செல்வர். இரவும் பகலு மாகவும் காலையும் மாலையுமாகவும் விளங்குபவர். சொல் லும் அதன் பொருளுமாக இருப்பவர். தோத்திர சாத்திரங் களாகத் திகழ்பவர். பாக்களாகவும் அவற்றின் பல்வேறு உரைகளாகவும் இருப்பவர். பழையனூரைப் பதியாக உடை யவர். உலகியல் மெய்நெறி ஆகியவற்றை நமக்குக் காட்டு பவர்.

தொண்டாய்ப் பணிவார்க் கணியார் தாமே
தூநீ றணியுஞ் சுவண்டர் தாமே
தண்டா மரையானும் மாலுந் தேடத்
தழலுருவா யோங்கி நிமிர்ந்தார் தாமே
பண்டான இசைபாட நின்றார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்டோள்க ளெட்டு முடையார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 6

மையாருங் கண்ட மிடற்றார் தாமே
மயானத்தி லாடல் மகிழ்ந்தார் தாமே
ஐயாறும் ஆரூரும் ஆனைக் காவும்
அம்பலமுங் கோயிலாக் கொண்டார் தாமே
பையா டரவ மசைத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செய்யாள் வழிபட நின்றார் தாமே.
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 7

6. திருவாலங்காடுடைய செல்வர், தொண்டராய்ப் பணிபவர்க்கு அணிமையர்; தூய திருநீறு அணியும் நன்னிறமுடையவர்; திருமால் பிரமர் தேடத் தீயுருவாய் ஓங்கி நிமிர்ந்தவர். பண்ணமைந்த இன்னிசையைப் பாடுபவர். பழையனூரைந் பதியாக உடையவர். எட்டுத் தோள்களை உடையவர்.

7. திருவாலங்காடுடைய செல்வர், நீலமிடற்றர் மயானத்தில் மகிழ்வாக ஆடுபவர். திருவையாறு, திருவாரூர், திருவானைக்கா, தில்லையம்பலம் ஆகிய தலங்களைக் கோயிலாக் கொண்டவர். படம் பொருந்திய பாம்பை அரையில் கட்டியவர். பழையனூரைப் பதியாக உடையவர். திருமகள் வழிபட நிற்பவர்.

81423
Q1:38

விண்முழுதும் மண்முழுது மானார் தாமே
மிக்கோர்க ளேத்துங் குணத்தார் தாமே
கண்விழியாற் காமனையுங் காய்ந்தார் தாமே
காலங்க ளூழி கடந்தார் தாமே
பண்ணியலும் பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்மழுவாள் ஏந்து கரத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே 8

காரார் கடல்நஞ்சை யுண்டார் தாமே
கயிலை மலையை உடையார் தாமே
ஊராஏ கம்ப முகந்தார் தாமே
ஒற்றியூர் பற்றி யிருந்தார் தாமே
பாரார் புகழப் படுவார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தீராத வல்வினைநோய் தீர்ப்பார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே 9

8. திருவாலங்காடுடைய செல்வர், விண்ணும் மண்ணுமாக விளங்குபவர். உயர்ந்தோர் ஏத்தும் குணத்தவர். கண்ணால் காமனைக் காய்ந்தவர். பல ஊழிகளைக் கடந்தவர். பண்ணமைந்த பாடல்களை உகப்பவர். பழையனூரைப் பதியாக உடையவர். திண்ணிய மழுவை ஏந்திய கரத்தினர்.

9. திருவாலங்காடுடைய செல்வர்; கடலிடைத் தோன்றிய கரிய நஞ்சை உண்டவர். கயிலை மலையை இடமாக உடையவர். தமது ஊராகத் திருவேகம்பத்தை உகந்தவர். ஒற்றியூரைப் பற்றியிருப்பவர். உலகோரால் புகழப்படுபவர். பழையனூரைப் பதியாக உடையவர். தீரா வல் வினைகளையும் தீர்ப்பவர்.

மாலைப் பிறைசென்னி வைத்தார் தாமே
வண்கயிலை மாமலையை வந்தி யாத
நீலக் கடல்சூ ழிலங்கைக் கோனை
நெரிய விரலா லடர்த்தார் தாமே
பாலொத்த மேனி நிறத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சீலத்தாரேத்துந் திறத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

10. திருவாலங்காடுறையும் செல்வர்; மாலைக் கால இளம்பிறையைச் சென்னியில் வைத்தவர்; கயிலை மலையை மதியாது அதனை எடுத்த இலங்கை மன்னன் இராவணனைக் கால் விரலால் நெரிய அடர்த்தவர். பால் போன்ற நிறத்தினர். பழையனூரைப் பதியாக உடையவர். ஒழுக்கமுடையோரால் ஏத்தப்படுபவர்.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

## 4. திருப்பதிக வரலாறு

சுந்தரமூர்த்தி நாயனார், சங்கிலியாரைப் பிரிந்து திருவொற்றியூரை நீங்கியதால் இரு கண்களையும் இழந்து, வழிப்போவார் வழிகாட்ட, திருவெண்பாக்கம் சென்று தொழுது, பெருமான் அருளால் ஊன்றுகோல் பெற்றுப் பழையனூருழைச் சென்று, காரைக்காலம்மையார் தலையால் நடந்த தலம் என்று திருஆலங்காட்டை மிதியாது அதன் அயலில் நின்று பாடியருளியது இத் திருப்பதிகம்.

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

முத்தா முத்தி தரவல்ல
முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ்
சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும்
பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 1

1. பழையனூர் மேய தலைவனே! திருவாலங் காட்டில் உறைபவனே! கட்டில்லாதவனே! அடியவர்கட்கு முத்தியருளும் உமைபங்கனே! சித்திகளை உடையவனே! சித்திகளை அடையும் வழியை காட்டும் சிவனே! தேவர் கட்குச் சிங்கம்போல்பவனே! அடியார்கட்குப் பற்றுக் கோடா னவனே! பக்தர்கள் போற்றும் பரமனே! என்றும் யான் உன் அடியவர்கட்கு அடியேனாகி வாழ்வேன்.

பொய்யே செய்து புறம்புறமே
திரிவேன் றன்னைப் போகாமே
மெய்யே வந்திங் கெனையாண்ட
மெய்யா மெய்யர் மெய்ப்பொருளே
பையா டரவம் அரைக்கசைத்த
பரமா பழைய னூர்மேய
ஐயா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 2

தூண்டா விளக்கின் நற்சோதீ
தொழுவார் தங்கள் துயர்தீர்ப்பாய்
பூண்டாய் எலும்பைப் புரம்மூன்றும்
பொடியாச் செற்ற புண்ணியனே
பாண்டாழ் வினைக ளவை தீர்க்கும்
பரமா பழைய னூர்மேய
ஆண்டா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 3

2. பழையனூர் மேய ஐயா! திருவாலங்காடரே! பொருந்தாதன செய்து உமக்கு மிகச் சேய்மையில் திரிந்த என்னை நேரே வந்து ஆட்கொண்ட மெய்ப்பொருளே! அரவம் அரைக்கசைத்த பரமரே! யான் என்றும் உம் அடியார்க்கு அடியேனாகி வாழ்வேன்.

3. பழையனூர் மேவிய தலைவரே! திருவாலங் காடரே! தூண்டா விளக்கின் சோதியே! தொழுவார் துயர் தீர்ப்பவரே! எலும்பை அணியாகப் பூண்டவரே! முப்புரங் களை எரித்தவரே! பழவினைகளைத் தீர்க்கும் பரமரே! அடியேன் உன் அடியார்க்கு அடியனாகியே வாழ்வேன்.

மறிநே ரொண்கண் மடநல்லார்
வலையிற் பட்டு மதிமயங்கி
அறிவே யழிந்தேன் ஐயாநான்
மையார் கண்ட முடையானே
பறியா வினைக ளவைதீர்க்கும்
பரமா பழைய னூர்மேய
அறிவே யாலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 4

வேலங் காடு தடங்கண்ணார்
வலையுட் பட்டுன் நெறிமறந்து
மாலங் காடி மறந்தொழிந்தேன்
மணியே முத்தே மரகதமே
பாலங் காடீ நெய்யாடீ
படர்புன் சடையாய் பழையனூர்
ஆலங் காடா உன்னுடைய
அடியார்க் கடியேன் ஆவேனே. 5

4. பழையனூர் மேவிய அறிவு வடிவரே! திருவாலங்காடரே! தீர்க்கஇயலாத வினைகளைத் தீர்ப் பவரே! நீலகண்டரே! மகளிர் வலையிலகப்பட்டு நான் அறிவிழந்தேன். இனியும் அவ்வாறு கெட்டொழியாது உன் அடியார்க்கு அடியனாகி வாழ்வேன்.

5. பழையனூரைச் சேர்ந்த திருஆலங்காடரே, மாணிக்கம், முத்து, மரகதம் போல்பவரே! பால் நெய் ஆடு பவரே, படர்சடை உடையவரே! மகளிர் ஆசை வலையி லகப்பட்டு நெறி மறந்து மயங்கி என்னையே மறந்துள்ள நான் இனியும் அவ்வாறிராது உன் அடியார்க்கு அடியனாகி வாழ்வேன்.

எண்ணார் தங்கள் எயில்எய்த
எந்தாய்! எந்தை பெருமானே
கண்ணாய் உலகங் காக்கின்ற
கருத்தா திருத்த லாகாதாய்
பண்ணார் இசைக ளவைகொண்டு
பலரும் ஏத்தும் பழையனூர்
அண்ணா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 6

வண்டார் குழலி உமைநங்கை
பங்கா கங்கை மணவாளா
விண்டார் புரங்கள் எரிசெய்த
விடையாய் வேத நெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும்
பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாஉன்
னடியார்க் கடியேன் ஆவேனே. 7

6: பண்ணிசை பாடிப் பலரும் வழிபடும் பழையனூர் அண்ணா! திருஆலங்காடரே! திரிபுரங்களை எரித்தவரே! என் தந்தையே! என் தந்தைக்கும் தலைவரே! கண்ணாய் நின்று உலகங்களைக் காப்பவரே! குற்றமற்றவரே! உன் அடியார்க்கு அடியவனாகி வாழ்வேன்.

7. பழையனூரை விரும்பிய தலைவரே! திருஆலங்காடரே! உமைபங்காளரே! கங்கைமணாளரே! முப்புரங்களை எரித்தவரே! வேதநெறிகளை அருளியவரே! பழைய வினைகளைத் தீர்ப்பவரே! பரமரே! உன் அடியார்க்கு அடியனாகி வாழ்வேன்.

பேழ்வாய் அரவின் அணையானும்
 பெரிய மலர்மேல் உறைவானும்
தாழா துன்றன் சரண்பணியத்
 தழலாய் நின்ற தத்துவனே
பாழாம் வினைக ளவைதீர்க்கும்
 பரமா பழைய னூர்தன்னை
ஆள்வாய் ஆலங் காடாஉன்
 னடியார்க் கடியேன் ஆவேனே. 8

எம்மான் எந்தை மூத்தப்பன்
 ஏழேழ் படிகால் எமையாண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற்
 பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்க ளவைகொண்டு
 பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாஉன்
 னடியார்க் கடியேன் ஆவேனே. 9

8. பழையனூரை ஆள்பவரே! திருவாலங் காடரே! பாம்பணையில் துயிலும் திருமாலும் தாமரை மலர்மேல் உறையும் பிரமனும் உன் தலைமையை உணருமாறு தழலுருவாய் நின்றவரே! பாழ்செய்யும் வினைகளைத் தீர்த்தொழிக்கும் பரமரே! யான் உன் அடியார்க்கு அடியேன் ஆகி வாழ்வேன்.

9. பல்வகையான சிறந்த மலர்களைக் கொண்டு அடியவர் பலரும் ஏத்தும் பழையனூரில் மேவிய தலைவரே! திருவாலங்காடரே! தந்தை, தாய், தந்தையின் தாய் ஆகிய வர்களின் ஏழேழ் தலைமுறைகளாக மூவேழ் தலைமுறை களிலும் எங்களை அடிமைகொண்டு ஆண்டவரே! இடு காட்டுள் ஆடல்புரிபவரே! யான் இனி அடியார்க்கு அடிய னாகி வாழ்வேன்.

*பத்தர் சித்தர் பலர்ஏத்தும்*
*பரமன் பழைய னூர்மேய*
*அத்தன் ஆலங் காடன்றன்*
*அடிமைத் திறமே அன்பாகிச்*
*சித்தர் சித்தம் வைத்த புகழ்ச்*
*சிறுவன் ஊரன் ஒண்டமிழ்கள்*
*பத்தும் பாடி ஆடுவர்*
*பரமன் னடியே பணிவாரே 10*

திருச்சிற்றம்பலம்

*10. பத்தர் சித்தர் பலரும் ஏத்தும் பரமரும், பழையனூர்த் திருஆலங்காட்டிலுறையும் தலைவருமாகிய இறைவரது அடிமைத் திறத்தில் அன்புடையவராய்ச் சித்தர்களும் தம் சித்தத்தில் வைத்துள்ள புகழாளராகிய நம்பியாரூரர் அருளிய இத்திருப்பதிகத் தமிழைப் பாடிஆடுபவர் சிவபிரான் திருவடிகளையே வணங்கி வாழ்பவராவர்.*

## காரைக்காலம்மையார் வேண்டுகோள்

*இறவாத இன்ப அன்பு*
*வேண்டிப்பின் வேண்டு கின்றார்*
*பிறவாமை வேண்டும் மீண்டும்*
*பிறப்புண்டேல் உன்னை என்றும்*
*மறவாமை வேண்டும் இன்னும்*
*வேண்டும் நான் மகிழ்ந்து பாடி*
*அறவாநீ ஆடும்போதுன்*
*அடியின்கீழ் இருக்க என்றார்.* - **சேக்கிழார்.**

உ

சிவமயம்

# திரு ஆலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்

## காரைக்காலம்மையார் அருளியன

பண்: நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்

1. கொங்கை திரங்கி நரம்பு எழுந்து
குண்டுகண் வெண்பல் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பல்கள் நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர்பெண்பேய்
தங்கி அலறி உலறு காட்டில்
தாழ்சடை எட்டுத் திசையும் வீசி
அங்கம் குளிர்ந்த அனல் ஆடும் எங்கள்
அப்பன் இடந்திரு ஆலங்காடே''.

மெலிந்த உடல், மேலெழுந்து நிற்கும் நரம்புகள், குழிவிழுந்த கண்கள், வெண்மையான பற்கள், உள் வாங்கிய வயிறு, சிவந்த தலைமயிர், நகக்கண் நீண்டு வளர்ந்த பரடு உயர்ந்த கணைக்கால்கள் இவற்றை உடைய ஒரு பெண் பேய், காட்டிலே தங்கி கூச்ச லிட்டுக் கத்தும். அத்தகைய காட்டிலே தாழ்ந்த சடை

முடிகள் எட்டுத் திசையும் பறக்க, மனமகிழ்ந்து நெருப் பினைக் கையில் ஏந்தித் தாண்டவமாடும் இடம் என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

2. ''கள்ளிக் கவட்டு இடைக்காலை நீட்டிக்
கடைக்கொள்ளி வாங்கி மசித்து மையை
விள்ள எழுதி வெடுவெடு என்ன
நக்கு வெருண்டு விலங்கு பார்த்துத்
துள்ளிச் சுடலைச் சுடுபிணத் தீச்
சுட்டிட முற்றும் சுளிந்து பூழ்தி
அள்ளி அவிக்க நின்றாடும் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே''.

எரிகின்ற கள்ளி மரக்கட்டைகளிடையே தன்காலை நீட்டி, அனல் தீய்ந்த கட்டையை எடுத்துத்தன் விழிக்கு மையாகத் தீட்டி வெடுவெடு என்று சிரித்து, வெருண்டு அங்கு ஒரு விலங்கினைப் பார்த்துத் துள்ளி எழுந்து, தீயினாலே எரிகின்ற பிணங்களின் மீதெல்லாம் விழுந்து அங்குள்ள சாம்பல் புழுதியை அள்ளிச்சுடும் நெருப்பை அவிக்க நின்று தாண்டவமாடும் இடம் என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

3. ''வாகை விரிந்து வெண்நெற்று ஒலிப்ப
மயங்கு இருள்கூர் நடுநாளை ஆங்கே
கூகையோடு ஆண்டலை பாட ஆந்தை
கோடு அதன்மேல் குதித்து ஓடவீசி
ஈகை படர் தொடர்கள்ளி நீழல்
ஈமம் இடு சுடுகாட்டு அகத்தே

ஆகம் குளிர்ந்து அனலாடும் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே.''

பரந்த வாகை மரத்தின் வெண்மையான நெற்றுக் காய்கள் சலசலக்க, நள்ளிருளில் அஞ்சும்படியாகக் கோட்டானும், ஆண்டலைப் பறவையும் கத்திப்பாட, ஆந்தை மரக்கிளையிலிருந்து குதித்துஓட, இண்டங் கொடி படர்ந்த கள்ளி மரத்தின் நிழற்பகுதியில் ஒரு புறம் பிணங்களை இடுவார்கள். மற்றொரு புறம் சுடுவார்கள். அத்தகைய சுடுகாட்டிலே மனமகிழ்ந்து கையில் அனல் ஏந்தி நடனமாடும் இடம் என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

4. ''குண்டில் ஓமம் குழிச் சோற்றை வாங்கிக்
குறுநரி தின்ன அதனை முன்னே
கண்டிலோம் என்று கனன்று பேய்கள்
கை அடித்து ஓடு இடுகாடு அரங்கா
மண்டலம் நின்று அங்கு உளாளம் இட்டு
வாதித்து வீசி எடுத்த பாதம்
அண்டம் உறநிமிர்ந்து ஆடும் எங்கள்
அப்பன் இடம் திருவாலங்காடே''.

சிறு குச்சிகளால் ஈமச்சடங்கிற்குப் பொங்கிய சோற்றைக் குள்ள நரிகள் உண்ணும். இதற்கு முன்பு இக்காட்சியைத் தாங்கள் கண்டதில்லை என்று பேய்க்கூட்டம் சுடுகாடு முழுவதும் அங்குமிங்குமாய் ஓடும். அந்த இடத் தினையே அரங்காகக் கொண்டு பல்வகைத் தாளங்கள் இட்டு, வானளாவக் காலை வீசி அண்டமுற நிமிர்ந் தாடும் என் அப்பன் இருக்கும் இடம் திருவாலங்காடு ஆகும்.

5. ''விழுது நிணத்தை விழுங்கிவிட்டு
வெண் தலைமாலை விரவப் பூட்டிக்
கழுது தன் பிள்ளையைக் காளி என்று
பேர் இட்டுச் சீர் உடைத்தா வளர்த்துப்
புழுதி துடைத்து முலை கொடுத்துப்
போயின தாயை வரவு காணாது
அழுது உறங்கும் புறங்காட்டில் ஆடும்
அப்பன் இடம் திருஆலங்காடே.''

எரியும் பிணத்தின் கொழுப்பை விழுங்கிய ஒரு பெண்பேயானது, மண்டையோடுகளை மாலையாக்கித் தன் பிள்ளையான மகட்பேய்க்குச் சூட்டி, காளி என்று பெயரிட்டுச் சீராட்டிப் பாராட்டிப் பால் கொடுத்துச் சென்றது. சென்ற தாய் திரும்பி வரக் காணாமல் அழுது கொண்டிருக்கும் நன்காடே என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

6. ''பட்ட அடி நெட்டு உகிர்ப் பாறுகால் பேய்
பருந்தொடு கூகை பகண்டை ஆந்தை
குட்டிஇட முட்டை கூகை பேய்கள்
குறுநரி சென்று அணங்கு ஆடுகாட்டில்
பிட்டடித்துப் புறங்காட்டில் இட்ட
பிணத்தினைப் பேரப்புரட்டி ஆங்கே
அட்டமே பாயநின்று ஆடும் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே.''

வற்றுப்போன கால்களும், நீண்ட நகங்களும் பிளவு பட்ட கால்களும் உடைய பேய்கள், பருந்தும், ஆந்தையும், கோட்டானும், முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்

கும் சுடுகாட்டில், பெரிய பேய்களுடனும், குள்ள நரியுடனும் எரிந்து கொண்டிருக்கும் பிணத்தினைப் புரட்டித் தின்னும். அத்தகைய சுடுகாட்டில் நின்று கூத்தாடும் இடமே என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

7. ''சுழலும் அழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்
சூழ்ந்து துணங்கையிட்டு ஓடி ஆடித்
தழலுள் எரியும் பிணத்தை வாங்கித்
தான்தடி தின்று அணங்கு ஆடுகாட்டில்
கழல்ஒலி ஓசைச் சிலம்பு ஒலிப்பக்
கால்உயர் வட்டணை இட்டு நட்டம்
அழல் உமிழ்ந்து ஓரிகதிக்க ஆடும்
அப்பன் இடம் திருஆலங்காடே.''

தன் கண்களிலிருந்து தீயினை உமிழும் கொள்ளி வாய்ப்பேய்கள் சூழ்ந்து கும்மியடித்து ஆடியும் ஓடியும் நெருப்பில் எரியும் பிணத்தை எலும்பொடும் உண்டு ஆடும் சுடுகாட்டில், அம்பிகையுடன் காலை மேல் ஏற்றி வட்டமிட்டுத் தழலின் அழல் எழ என் அப்பன் திருநடனம் ஆடும் இடம் திருஆலங்காடு ஆகும்.

8. '' நாடும் நகரும் திரிந்து சென்று
நன்னெறி நாடி நயந்தவரை
மூடி முதுபிணத்து இட்ட மாடே
முன்னிய பேய்க்கணம் சூழச்சூழக்
காடும் கடலும் மலையும் மண்ணும்
விண்ணும் சுழல அனல் கையேந்தி

ஆடும் அரவம் புயங்கன் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே''.

நாட்டிலும் நகரத்திலும் திரிந்து நல்வழி நாடி அன்பு பெற்றவரையும், வினை முடிந்து சுடுகாட்டில் பிணமானபின் பேய்க்கூட்டங்கள் சூழும். அந்தப் பேய்க்கூட்டமும், காடும், கடலும், மலையும், மண்ணும், விண்ணும் அனைத்தும் சுழன்றாட, படமெடுத்து ஆடும் பாம்பினைத் தோளில் அணிந்து, கையில் தீ ஏந்தி ஆடும் என் அப்பன் இடம் திருவாலங்காடு ஆகும்.

9. ''துத்தம் கைக்கிளை விளரி தாரம்
உழை இளி ஓசை பண் கெழுமப் பாடிச்
சச்சரி கொக்கரை தக்கையோடு
தகுணிதம் தந்துபி தாளம் வீணை
மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்
தமருகம் குடமுழா மொந்தை வாசித்து
அத்தனை விரவினோடு ஆடும் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே''.

குரல் முதலிய எழுவகை நரம்பு ஒலியோடு, இனிய பண் ஓசைகளையும் பாடிச் சச்சரி, கொக்கரை, தக்கை, தகுணிதம், துந்துபி, தாளம், வீணை, மத்தளம், கரடிகை, வன்கை, மென்தோல், தமருகம், குடமுழா, மொந்தை என்ற இசைக் கருவிகள் அனைத்தும் ஒலிக்கத் தாண்டவமாடும் இடம் என் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

10. "புந்தி கலங்கி மதிமயங்கி
இறந்த வரைப் புறங்காட்டில் இட்டுச்
சந்தியில் வைத்துக் கடமை செய்து
தக்கவர் இட்ட செந்தீ விளக்கா
முந்தி அமரர் முழவின் ஓசை
திசை கதுவச் சிலம்பு ஆர்க்க ஆர்க்க
அந்தியில் மாநடம் ஆடும் எங்கள்
அப்பன் இடம் திருஆலங்காடே".

வாழ்ந்தவர் வீழ்ந்து விட்டாரே என்று மனமானது கலங்கி, அறிவானது மயங்கி இறந்தவரைச் சுடுகாட்டில் வைத்து ஈமக் கடன்களைச் செய்தவர் இட்ட தீயே விளக்காகவும், தேவர்கள் முழக்கும் முழவோசை எட்டுத் திசைகள் பரவ, சிலம்பு ஒலிக்க, மாலைப் பொழுதில் நடனம் ஆடும் இடம் எங்கள் அப்பன் இருக்கும் திருவாலங்காடு ஆகும்.

11. "ஒப்பினை இல்ல வன்பேய்கள் கூடி
ஒன்றினை ஒன்று அடித்து ஒக்கலித்துப்
பப்பினை இட்டுப் பகண்டை ஆடப்
பாடு இருந்து அந்நரி யாழ் அமைப்ப
அப்புனை அணிதிரு ஆலங்காட்டுள்
அடிகளைச் செடிதலைக் காரைக்கால் பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்
சிவகதி சேர்ந்து இன்பம் எய்துவாரே".

ஒப்பனை இல்லாத வலிமை பொருந்திய பேய்கள் ஒன்றுகூடி ஒன்றினை ஒன்று அடித்துப்புலம்பி அழுதிடவும்,

தோகை விரித்துக் காடைகள் ஆடவும், பக்கத்திலே நரிகள் யாழொலி போல் ஓலமிட, அங்கு நடனமிடும் சிவனடிக் கீழிருந்து ஆனந்தக் கூத்தைக் கண்டு மகிழும் காரைக்கா லம்மையின் செந்தமிழ்ப் பாடல்கள் பத்தையும் பாடுபவர் சிவலோக இன்பத்தை எய்துவர்.

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

1. ''எட்டி இலவம் ஈகை சூரை
காரை படர்ந்து எங்கும்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி
சோர்ந்த குடர் கௌவப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டில்
பறை போல் விழிகண் பேய்
கொட்ட முழவம் கூளி பாடக்
குழகன் ஆடுமே''.

எட்டி, இலவம், ஈகை, காரை ஆகிய மரங்களும், கொடிகளும் எங்கும் அடர்ந்து படர்ந்துள்ள சுடுகாட்டில், கள்ளப் பேய்கள் புதைத்த பிணங்களைச் சூழ்ந்து அப்பிணத் தின் குடலை எடுத்துத் திரியும். அத்தகைய பிணங்கள் நிறைந்த சுடுகாட்டில் பறைபோன்று பெரியகண்களையுடைய பேய்கள் முழவம் கொட்ட, சிறியபேய்கள் பாட்டிசைக்கச் சிவ பெருமான் ஆனந்தத் தாண்டவம் ஆடுவான்.

2. "நிணம் தான் உருகி நிலம்தான் நனைப்ப
நெடும்பல் குழிகண் பேய்
துணங்கை எறிந்து சூழும் நோக்கிச்
சுடலை நவிழ்த்து எங்கும்
கணங்கள் கூடிப் பிணங்கள் மாந்திக்
களித்த மனத்தவாய்
அணங்கு காட்டில் அனல்கை ஏந்தி
அழகன் ஆடுமே".

பிணத்தின் கொழுப்பு தீயால் உருகி மண் முழுதும் நனைக்கவும், நீண்ட பற்களையும், கிணறு போன்ற ஆழமான விழிகளையும் கொண்ட பேய்கள் இரு கைகளைத் தூக்கிக் கும்மி அடித்துக் கூடிச் சுடுகாட்டில் உள்ள பிணங்களை உண்டு களிக்கும். அத்தகைய அச்சம் தரும் இடுகாட்டில் ஒரு கையிலே நெருப்பை ஏந்திச் சிவன் தாண்டவம் ஆடுகிறான்.

3. "புள்கள் பொதுத்த புலால் வெண்தலையைப்
புறமே நரிகவ்வ
அட்கு என்று அழைப்ப ஆந்தை வீச
அருகே சிறுகூகை
உட்க விழிக்க ஊமன் வெருட்ட
ஓரிகதித்து எங்கும்
பிட்க நட்டம் பேணும் இறைவன்
பெயரும் பெருங்காடே".

பறவைகள் இறந்து கிடக்கும் பிணத்தினைக் குத்திக் கிழித்துத் தின்னும். பிணத்தின் தலையை ஒரு பக்கம்

நரி கவ்விச் செல்லும். ஆந்தை ஒரு பக்கம் அஃகஃகு என்று அலரும்; அதன் அருகே சிறுகோட்டான் விழிகொட்டாமல் பார்க்கும். பெருங்கோட்டான் வெருட்டும். ஒருபக்கம் கிழநரி அங்கும் இங்கும் அலையும். அத்தகைய சுடுகாட்டிலே சிவன் திருநடனம் புரிகிறான்.

4. ''செத்த பிணத்தைத் தெளியாது ஒருபேய்
சென்று விரல் சுட்டிக்
கத்தி உறுமிக் கனல்விட்டு எறிந்து
கடக்கப் பாய்ந்து போய்ப்
பத்தல் வயிற்றைப் பதைக்க மோதிப்
பல்பேய் இரிந்து ஓடப்
பித்தன் வேடம் கொண்டு நட்டம்
பெருமான் ஆடுமே''.

வெந்து கிடக்கும் ஒரு பிணத்தை அதன் இயல் பறியாது ஒரு பேயானது அதன் அருகே சென்று விரலால் குத்திப் பார்த்தது. சூடு பொறுக்கமுடியாமல் கத்திக் கூச்சலிட்டு எரியும் நெருப்பைக் கடந்துபோய் பெரும்பானை போன்ற வயிற்றினையுடைய ஒரு பேய் மீதுமோத. அதனால் பல பேய்கள் பயந்தோடும் சுடு காட்டிலே பித்தனாக வேடம் கொண்டு சிவன் அங்குக் கூத்தாடுகிறான்.

5. ''முள்ளி தீந்து முளரி கருகி
மூளை சொரிந்து உக்குக்
கள்ளி வற்றி வெள்ளில் பிறங்கு
கடுவெம் காட்டுள்ளே

புள்ளி உழைமான் தோல் ஒன்று உடுத்துப்
புலித்தோல் பியல்கு இட்டு
பள்ளி இடமும் அதுவே ஆகப்
பரமன் ஆடுமே."

பிணங்களை எரிப்பதனால் சுடுகாட்டில் உள்ள முள்ளிச் செடிகள் தீய்ந்துவிடும். ஓம விறகுகள் கருகிவிடும். மூளை உருகிச் சிதறிவிடும். கள்ளிச்செடிகள் பால்வற்றி வெள்ளிக்குச்சி போல் மாறிய கொடிய சுடுகாட்டின் இடையே புள்ளிமான் தோலை ஆடையாக உடுத்தும், புலித்தோலை அரையில் அணிந்தும் உறங்கும் இடமு மாகக் கொண்டு சிவன் திருத்தாண்டவம் புரி கின்றான்.

6. "வாளைக் கிளர வளைவாள் எயிற்று
வண்ணச் சிறுகூகை
மூளைத் தலையும் பிணமும் விழுங்கி
முரலும் முதுகாட்டில்
தாளிப் பனையின் இலைபோல் மயிர்க்கண்
குழல்வாய் அழல்கண்பேய்
கூளிக் கணங்கள் குழலோடு இயம்பக்
குழகன் ஆடுமே."

கழுகுகள் பிணங்களைக் கொத்திக் கிளறவும், வளைந்த நீண்ட அலகுடைய குறுங்கோட்டான் சிதறிய மூளைத் தலையையும் பிணத் தசையையும் விழுங்கிக் கத்தும் சுடுகாட்டிலே, தாளிப்பனை இலை போன்ற முடி களைக் கொண்ட நெருப்பு விழிப் பேய்க்கூட்டங்கள் பாட்டிசைக்கச் சிவன் நடனம் புரிகின்றான்.

7. "நொந்திக் கிடந்த சுடலை தடவி
நுகரும் புழுக்கு இன்றிச்
சிந்தித்து இருந்து அங்கு உறங்கும் சிறுபேய்
சிரமம் படுகாட்டில்
முந்தி அமரர் முழவின் ஓசை
முறைமை வழுவாமே
அந்தி நிருத்தம் அனல்கை ஏந்தி
அழகன் ஆடுமே".

பாலைவனம் போன்று வறண்டு கிடக்கும் சுடுகாட்டில் உண்பதற்கு ஒன்றுமற்றுப் பசிக்கு என்ன செய்வது என்று சிந்தித்து, அங்கே உறங்கும் சிறுபேய்கள் துன்பப் படுகின்ற சுடுகாட்டிலே; தேவர்கள் கூத்துக்கிசைய முறைமை வழுவாது இசைக் கருவிகள் இசைக்க, ஒரு கையில் தீச்சுடரை ஏந்திய வண்ணம் சிவன் ஆடுகிறான்.

8. "வேய்கள் ஓங்கி வெண் முத்து உதிர
வெடிகொள் சுடலையுள்
ஓயும் உருவில் உலறு கூந்தல்
அலறு பகுவாய்
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி
அணங்கும் பெருங்காட்டில்
மாயன் ஆட மலையான் மகளும்
மருண்டு நோக்குமே".

பருத்த மூங்கில்கள் வளர்ந்து வெண்மையான முத்து உதிர்க்கும் சுடுகாட்டிலே, தளர்ந்த உருவத்தோடும், உலர்த்திய கூந்தலோடும், ஓவென்று அலறும் பெரு

வாயுடைய பேய்க் கூட்டம் ஒன்று. கூடிப் பிணங் களைப் பிடுங்கித் தின்னும். அத்தகைய அச்சம் தரும் பெருங்காட்டில், எல்லாம் வல்ல சித்தனாகிய சிவன் தாண்டவம் ஆடுவான், மலையரசன் மகள் உமாதேவி யார் வியப்போடு பார்த்திருப்பாள்.

9. "கடுவன் உகளும் கழை சூழ்பொதும்பில்
கழுகும் பேயும் ஆய்
இடுவெண் தலையும் ஈமப் புகையும்
எழுந்த பெருங்காட்டில்
கொடுவெண் மழுவும் பிறையும் ததும்பக்
கொள் என்று இசை பாடப்
படுவெண் துடியும் பறையும் கறங்கப்
பரமன் ஆடுமே."

குரங்குகள் பாய்ந்து திரியும் குறுங்காட்டில் கழுகு களும், பேய்களும் அலையும். வெண்மையான கபால ஓடும், பிணத்தைச் சுடும் புகையும் நிறைந்து இருக்கின்ற சுடுகாட்டிலே, கையில் கொடிய எரியிரும்பு ஏந்தித் தலையிலே சூடிய இளம்பிறை ஆட, இசைப் பாடற் கேற்ப உடுக்கையும் பறையும் ஒலிப்பச் சிவபெருமான் தாண்டவம் ஆடுகிறான்.

10. "குண்டை வயிற்றுக் குறிய சிறிய
நெடிய பிறங்கல் பேய்
இண்டு படர்ந்த இருள்சூழ் மயானத்து
எரிவாய் எயிற்றுப் பேய்

கொண்டு குழவி தடவி வெருட்டிக்
கொள் என்று இசை பாட
மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ
விமலன் ஆடுமே.''

குறுகிய வயிற்றினைக் கொண்டு குள்ளமாகவும், உயரமாகவும், நீண்ட கரிய பாறை போன்ற பேய்களும், இண்டங்கொடி படர்ந்திருக்கும் இருண்ட சுடுகாட்டில், நெருப்புப் பசிகொண்ட பேய்களும், தம்தம் பிள்ளைகளை விரும்பியும், வெருட்டியும் ஆடுகிறபோது பேரிசை முழங்க, அடர்ந்தொளிரும் செஞ்சடைக் கற்றைகள் பொலிய சிவன் கூத்தாடுகிறான்.

11. ''சூடும் மதியம் சடைமேல் உடையார்
சுழல்வார் திருநட்டம்
ஆடும் அரவம் அரையில் ஆர்த்த
அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக்
காரைக்கால் பேய்தன்
பாடல் பத்தும் பாடி ஆடப்
பாவம் நாசமே''.

தன் தலையிலே பிறையைச் சூடியுள்ள பெருமான், எழுவகைத் தாண்டவங்களை ஆடுவார். படமெடுத்து ஆடும் பாம்பினை அணிந்த பரமசிவனின் திருவடிப் பேற்றாலே, சுடுகாட்டில் நெருப்பைக் கக்கும் வாயையும், வயிற்றையும் உடைய பேய்களைப் பாடும் காரைக்கால் அம்மையின் பாடல்கள் பத்தையும் பாடி ஆடப்பாவங்கள் தொலையும்.

# திருஆலங்காடு தலத்துடன் தொடர்புடைய சரித்திரப் புகழ்வாய்ந்த நீலியின் சரிதம்

கற்றோர் போற்றும் காஞ்சி மாநகரில் ஞானதிபன் என்னும் அந்தணர் ஒருவர் வசித்து வந்தார். ஒழுக்க நெறியிலும், சிவபக்தியிலும் சிறந்த அப்பெரியாரின் மனைவிக்குத் தக்கபருவத்தில் ஆண்குழந்தை ஒன்று பிறந்தது. புவனபதி என்று பெயரிட்டு அக்குழந்தையைச் சீராட்டி, பாராட்டி வளர்த்து வந்தனர். தக்க பருவம் எய்தியதும் புவனபதிக்கு முறைப்படி திருமணம் செய்துவைத்தார்கள். சிறிதுகாலம் இல்லறத்தில் ஈடுபட்டு மகிழ்ந்திருந்து புவனபதி புனிதத் தலங்களைத் தரிசித்து ஆன்ம ஈடேற்றம் பெறவிரும்பினான்.

எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய தென்னாடுடைய சிவனைத் திருத்தலங்கள் தோறும் தரிசித்து மகிழ்ந்து காசியம்பதி சென்று, சிறிதுகாலம் தங்கி, கங்கையில் நாள்தோறும் முறைப்படி நீராடி காசிவிஸ்வநாதரைத் தரிசித்து வாழ்ந்து வந்தான்.

காசி நகரின் மற்றொரு பகுதியின் சத்தியஞானி என்னும் அந்தணர் சிவக்கியானி என்னும் மகனுடனும், நவக்கியானி என்னும் பெண் மகளுடனும் வசித்துவந்தார். அவர் புவனபதியின் ஒழுக்கநெறியையும், தவநெறியையும், அழகையும் கண்டு மகிழ்ந்து தன்வீட்டிற்கு விருந்தினனாகத் தங்கி இருக்கும்படி அழைத்தார். அவரது அழைப்புக்கு இணங்கிப் புவனபதியும் அவரது இல்லத்தில் சிலநாள் தங்கி

இருந்தான். அவனது நன்னடத்தையால் கவரப்பட்ட சத்திய ஞானி தனது மகளான நவக்கியானியைக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார். பெண் மோகத்தில் மதிமயங்கிய புவனபதி தனக்கு ஏற்கெனவே திருமணமாகி மனைவி காஞ்சிபுரத்தில் இருப்பதைச் சொல்லாமல் மறைத்துவிட்டான். காசியில் இருந்து இரண்டாம் மனைவியுடன் இன்பம் துய்த்துச் சில மாதங்கள் வாழ்ந்துவந்த அவன் சொந்தஊராகிய காஞ்சியம்பதிக்கு வரத்தீர்மானித்தான். இச்செய்தியை அறிந்த நவக்கியானி ''நானும் உங்களுடன் வருவேன்'' என்று கூறிப் புறப்பட்டாள். அவளுடைய சகோதரனாகிய சிவக்கியானி'' உங்கள் இருவரையும் முறைப்படி அழைத்துச்சென்று சொந்த வீட்டிற்குக் குடியமர்த்திவிட்டு வருவேன்'' என்று சொல்லி அவர்களுடன் காஞ்சிக்குப் புறப்பட்டான். மறுப்பு ஏதும் சொல்ல முடியாதவனாய்க் குழப்பத்தோடு மனதைத் தேற்றிக் கொண்ட புவனபதி அவர்கள் இருவருடன் தன் சொந்த ஊர்நோக்கிப் புறப்பட்டான். சொந்தஊர் நெருங்க நெருங்க இரண்டாம் மனைவியை எப்படித் தன் ஊருக்கு அழைத்துப் போவது எனத் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினான். மாலைப்பொழுது மங்கிய வேளையில் திருஆலங்காட்டை அடைந்த அவர்கள் மூவரும் அங்கேயே அந்த இரவைக் கழிக்க முடிவு செய்தார்கள். முதல் மனைவிக்கும் உற்றார், உறவினர்களுக்கும் பயந்து உடன் வந்த இருவரையும் திட்டமிட்டுக் கொலை செய்யப் புவனபதி முடிவு செய்தான்.

தனது மைத்துனனாகிய சிவக்கியானியைக் குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டுவர அனுப்பிவிட்டு, தன்தோள் மீது இருந்த துண்டை எடுத்துத் தனது இரண்டாம் மனைவியாகிய நவக்கியானியின் கழுத்தை இறுக்கிக் கொன்று கீழே கிடத்திவிட்டு மைத்துனன் வருவதற்குள் விரைந்து காஞ்சியை

நோக்கிப் புறப்பட்டான். தண்ணீர்க் குடத்துடன் வந்த சிவக்கியானி தன் தங்கை கொலையுண்டிருப்பதைக் கண்டு அலறித் துடித்து புரண்டு புரண்டு அழுதான். உடன்பிறந்த தங்கை கொலையுண்டபின் வாழ மனமின்றிப் பக்கத்தில் இருந்த புளியமரத்தில் சுருக்கிட்டுக் கொண்டு தானும் உயிர் துறந்தான்.

அகால மரணம் அடைந்த சிவக்கியானி, நவக்கியானி இருவரும் முறையே நீலன், நீலி என்னும் பெயருடன் பேய் வடிவாகிப் புவனபதியைப் பழிக்குப் பழிவாங்க எண்ணித் தக்க சமயம் பார்த்துத் திருஆலங்காட்டில் சுற்றித் திரிந்து வந்தனர். மனைவியைக் கொன்ற புவனகிரி மறுபிறவியில் நாகந்தை என்ற வைசிய குலத்தவர்க்கு மகனாகப்பிறந்து தரிசனன் எனப்பெயர்பெற்று வளர்ந்துவந்தான். அவனது ஜாதகத்தைப் பார்த்த சோதிடநூல் வல்லுநர்கள் "இவன் முற்பிறவியில் ஒரு பெண்ணைக் கொலைசெய்துள்ளான். அந்தப்பேய் இவ்வூருக்கு வடக்கில் இரண்டு மைல் தொலை வில் சுற்றித்திரிந்திட வருகிறது. அப்பேய் இவனைக் கொன்று பழிதீர்த்துக் கொள்ளும்" என்று கணித்துக் கூறினார்கள். தந்தையாகிய நாகந்தை செட்டி மனம்வருந்தி அப்பழி தன் மகனைச் சாராதிருக்க வழி செய்து தரவேண்டும் என்று வேண்டினார். சோதிட நூல் வல்லுநர்கள் ஒரு கத்தியைச் செய்து அதில் பேயை விலக்கிவைக்கும் "பைசாச மந்திரத்தை" உருஏற்றி இந்தக் கத்தி இருக்குமளவுக்கும் எந்தத் தீங்கும் நேராது. ஆனால், இவன் வடபகுதி போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லிச் சென்றார்கள்.

தரிசனன் உரிய வயதடைந்தும் காஞ்சிபுரத்தில் கொற்றந்தைச்செட்டி என்பவரின் மகளைத் திருமணம் செய்து

கொண்டு அவள் மூலம் ஓர் ஆண்குழந்தையையும் பெற்றெடுத்தான். அவனது தந்தையான நாகந்தைச் செட்டி அவனுக்கு முற்பிறப்பின் இரகசியத்தைக் கூறி மந்திரம் உரு ஏற்றப்பட்ட கத்தியைக் கொடுத்து நீ எந்தக் காரணம் கொண்டும் வடபகுதிக்குப் போகக்கூடாது என்றுசொல்லிச் சில நாளில் இறந்துவிட்டார்.

திருஆலங்காட்டிற்கு அருகில் அமைந்த பழையனூரில் வேளாளர் குளத்தில் புரிசைக்கிழார் என்பாரும் அவரது மனைவியான திருப்பச்சை நாச்சியாரும் பிள்ளைப்பேறு இல்லாமல் வருந்தினர். தமது குறையைக் களைய ஆலங்காட்டு அப்பனை வேண்டித் தவம் இருந்தனர். ஐயனின் திருவருளால் திருப்பச்சை நாச்சியார் கருவுற்றாள். அக்கருவில் பேய்களாய்ச் சுற்றித் திரிந்த நீலனும் நீலியும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தனர். இக்குழந்தைகள் இருவரும் பகலில் தொட்டிலில் படுத்து உறங்குவார்கள். நடுஇரவில் பழைய பேயுருவு கொண்டு தொட்டிலில் அடைக்கப் பட்டுள்ள ஆடு மாடுகளைக் கொன்று தின்று, பின்னர் பழையபடி குழந்தைகளாகித் தங்களது தொட்டிலில் வந்து படுத்துறங்குவார்கள். இப்படியே தினம் தினம் ஆடு, மாடுகள் அழிந்து போவதைக் கண்டு கால்நடைகளின் உரிமையாளர்கள் காவலர்களைத் தண்டிக்கவே காவலர்கள் நடு இரவு நேரத்தில் மறைந்திருந்து கண்காணிக்கத் துவங்கினார்கள். பேய்உருவில் ஆடுமாடுகளைக் கொன்று தின்றுவிட்டுப் புரிசைக்கிழார்வீட்டிற்குள் சென்று பேய்உருவங்கள் மறைந்ததைக் கண்டு காவலர்கள் இச்செய்தியை விடிந்தவுடன் புரிசைக்கிழாரிடம் எடுத்துரைத்தனர். அவன் இன்று நாமே கவனிப்போம் என்று விழித்திருந்து பார்த்தபோது குழந்தைகள் பேயாவதையும், ஆடு மாடுகளைக் கொன்று

நின்றுவிட்டு மீண்டும் குழந்தைகளாக உருமாறித் தொட்டி லில் கிடப்பதையும் கண்டு பயந்து இது என்ன பாவமோ என வருந்தி, இக்குழந்தைகளைக் கொன்றுவிடுவதுதான் நல்லது என உணர்ந்தனர். ஆனால், குழந்தைப்பேறு கிட்டாத நமக்கு மேலும், சிசுக் கொலை பாவம், தேவையில்லை என்று உணர்ந்து அக்குழந்தைகளைத் தொட்டிலோடு எடுத்துச் சென்று நடராஜப்பெருமான் சன்னதிக்கு அருகில் இருந்த ஒரு வேலமரத்தில் கட்டிவைத்துவிட்டு வீடு சேர்ந்தார்கள்.

இரண்டு குழந்தைகளும் பழைய உருக்கொண்டு தம்மை உணர்ந்துகொண்டார்கள். ''நாம் இருவரும் ஒரே இடத்தில் இருந்தால் நம்மைக் கொலை செய்தவனை நாம் பழிவாங்கஇயலாது. எனவே, நீ மட்டும் இந்தக் காட்டிலேயே இரு. நான் திருச்செங்கோடு போய் அங்குள்ள வேலமரத்தில் தங்கி இருப்பேன்'' என்று சொல்லிவிட்டுத் தமயனின் உத்தரவு பெற்று நீலி திருச்செங்கோடு சென்று அங்குத் தங்கிவிட்டாள். நீலன் மட்டும் ஏற்கெனவே தங்கியிருந்த திருவாலங்காட்டு வேலமரத்திலியே தங்கிஇருந்தான். ஒருநாள் பழையனூரில் உள்ள வேளாளர்கள் தமது உழவிற்குக் கலப்பை மரம் தேவைப் படவே செழிப்பாக இருந்த அந்த வேலமரத்தை வெட்டிக் கொண்டு போய்விட்டார்கள். தான் தங்கி இருந்த வேலமரம் வெட்டப்பட்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்த நீலன் அவர்களைப் பழிவாங்க எண்ணம் கொண்டான். பழைய னூரில் வாழ்ந்துவந்த குருக்கள் ஆலங்காட்டு அப்பனுக்குப் பூசை செய்துமுடித்துப் பிரசாதத்தை எடுத்துக்கொண்டு தம் வீட்டுக்கு வந்தபோது பேயாய் இருந்த நீலன் அவரை நையப்புடைத்து அவரிடமிருந்து நிவேதானத்தைப் பறித்துக் கொண்டது. மறுநாள் குருக்கள் தாம் பட்ட துன்பத்தை நடராசப்பெருமானிடம் கூறி முறையிட்டார். தம் பூசைக்கு

இடையூறு செய்த நீலனைக் கண்டிக்க எண்ணிய இறைவன், தன் கணநாதனாகிய குண்டோதரனை அனுப்பி நீலனைக் கொல்லச் செய்தார்.

இச்செய்தியை அறிந்த திருச்செங்கோட்டில் உள்ள நீலி விரைந்து வந்து அழுது புலம்பித் தன் தமையனின் மறைவுக்கு மூல காரணம் வேளாளர்கள்தான் என்று உணர்ந்தாள். தன் குறிக்கோளாகிய முற்பிறவிப்பழியையும், தன் சகோதரனின் மறைவுக்குக் காரணமான வேளாளர் களையும் ஒருசேரப்பழிவாங்குவேன் எனச் சபதம் பூண்டு தக்க தருணத்தை எதிர்பார்த்துத் திருவாலங்காட்டில் காத்திருந்தாள்.

காஞ்சியில் புகழோடு வாழ்ந்து வந்த தரிசனன் தன் தந்தையைக் காட்டிலும் வியாபாரத்துறையில் புகழோடு விளங்கினான். பழையனூரில் வளமையும், சிறப்பையும் கேள்வியுற்ற தரிசனன் அங்குச் செல்ல எண்ணங்கொண்டான். பெற்ற தாயும், மனைவியும் உற்றார் உறவினரும் தரிசனனைப் பார்த்து, ''உன் தந்தை கூறியதை எண்ணிப்பார். வடதிசையே போகக்கூடாது என்றல்லவா கூறியுள்ளார். பழையனூர் நமக்கு வடக்கே தானே உள்ளது.'' என்று கூறித் தடுத்தார்கள். ''என்னிடம் தான் மந்திர உருவேற்றம் செய்யப்பட்ட கத்தி உள்ளதே '' என்று கூறித் தரிசனன் பழையனூரை நோக்கி வியாபார நிமித்தமாகப் புறப்பட்டான். வியாபார நிமித்த மாகச் செல்வதால் குழந்தையும், உன்னையும் அழைத்துச் செல்வது சிரமம் என்று கூறித் தடுத்தும் கேளாமல் அவனது மனைவியும் அவனுடன் சென்றாள். தக்கோலம் என்ற ஊர் வந்ததும் மாலைப்பொழுது சாய அங்கு இருவரும் இரவு தங்க முடிவு செய்து தங்கினார்கள். தன் மனைவியை உடன் அழைத்துச் செல்ல விரும்பாத நீலன் தன் மனைவி அயர்ந்து

தூங்கும் நள்ளிரவு நேரத்தில் அவளை விட்டுவிட்டுத் தனது பயணத்தைத் தொடர்ந்தான். விடிந்ததும் உறக்கம் கலைந்து எழுந்து தன் கணவனைக் காணாத அப்பெண் மிகவும் வருந்தி அழுது புலம்பினாள். அப்பெண்ணின் நிலையைக் கண்டு இரக்கங்கொண்ட அவ்வூர்ப் பொதுமக்கள் அவ ளுக்குத் தக்க துணை சேர்த்துக் காஞ்சிபுரத்திற்கே திருப்பி யனுப்பி விட்டார்கள்.

தரிசனன் திருவாலங்காட்டின் வழியே வரும்போது முன்பிறவிப் பழியைத் தீர்த்துக்கொள்ளக் காத்திருந்த நீலிப் பேய் அவனைக் கண்டுகொண்டது. பழிவாங்க இதுவே தருணம் என்று எண்ணி ஒரு வேசிப்பெண்ணாக உருவம் கொண்டு அவனை வழிமறித்து ''வாருங்கள் சிலநாள் இங்குத் தங்கி இன்பம் அனுபவித்துச் செல்லலாம் என்று கூறித் தடுத்தது. ''இச்செய்கை உனக்கும், எனக்கும் எவ்வித நன்மை யும் தராது. மாறாக எனக்குப் பாவம் உண்டாகும். நான் உனது செய்கைக்கு இணங்கமாட்டேன் என்று பல்வேறு நீதிகளை எடுத்துக்கூறி அவளைவிட்டுவிலகித் தன்வழியே நடந்தான். தரிசனனிடம் மந்திர சக்தி வாய்ந்த கத்தி இருந்தமையால் அவனை நெருங்கமுடியவில்லை. சற்றுதூரம் சென்றதும், ஒரு சிறு மளிகைக் கடையை நிர்மாணித்துக் கொண்டு வியாபாரம் செய்பவர்போல் அமர்ந்து மீண்டும் அவனை அழைத்து இங்கேயே தங்கி வியாபாரம் செய்யலாம் என ஆசைகாட்டி உபசரித்தாள். இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது என்று உணர்ந்த தரிசனன் தனது மந்திரக் கத்தியை உறையில் இருந்து எடுத்தான். மளிகைக்கடை சரக்குகள், பெண் ஆகிய அனைத்தும் மாயமாய் மறைந்தன. இதைக்கண்ட தரிசனனுக்கு அச்சம் ஏற்பட்டது. பெரியவர்களின் சொல்லைக் கேளாமல்

வந்துவிட்டோமே'' என அவன் பெரிதும் வருந்தினான். பயம் மேலிட விரைவாகப் பழையனூரை நோக்கி நடந்தான்.

நீலிப் பேய் தன் சுய உருவங்கொண்டு, ''உனக்கு மனைவியாய் வாழ்ந்து ஒரு பாவமும் செய்யாத என்னைக் கொலை செய்த உன்னையும் என் தமையன் இறப்புக்குக் காரணமான வேளாளர்களையும் ஒருசேரப் பழிதீர்த்துக் கொள்வேன்'' என்று வஞ்சினம் கூறி மறைந்தாள். பெரியவர்களின் சொல்லை மீறிவந்த காரணத்தால் இடர்ப்பட நேர்ந்ததே என வருந்தி மனம்நொந்த தரிசனன் தாகம்மேலிட நீர் இருக்கும் இடத்தைத் தேடி அலைந்தான். பழிதீர்க்க எண்ணம் கொண்ட பேய் மீண்டும் ஒரு தண்ணீர்ப் பந்தலை அமைத்துக் கொண்டு ''வாருங்கள் வந்து நீர் பருகி இளைப்பாறிச் செல்லுங்கள் என்று கூறி அழைத்தது.'' இதுவும் முன்போலச் சூழ்ச்சி தானோ என ஐயம் கொண்ட தரிசனன் தனது கத்தியை உறையில் இருந்து வெளியே எடுத்தான். முன் போலவே தண்ணீர்ப் பந்தலும், அப்பெண்ணும் மாயமாய் மறைந்தனர். தொடர்ந்து எழுந்த பயத்தால் அவன் ஓடத் துவங்கினான். அவனை இடைமறித்த பேய், ''நீ எங்கு போனாலும் இன்று இரவு உன்னையும், நாளை வேளாளர் களையும் பழி வாங்குவது உறுதி'' என்று சபதம் இட்டு மறைந்தாள். தரிசனன் பழையனூர் வேளாளர் பெருமக்களிடம் அடைக்கலம் புகுந்து நடந்தவற்றைச் சொல்லித் தன்னைக் காப்பாற்றவேண்டும் என்று முறையிட்டான். அப்பெரு மக்களும் ஆறுதல் கூறி அவனது தாகத்தைத் தீர்த்து உணவளித்து இருக்கச் செய்தார்கள்.

பழிவாங்கத் தக்க தருணத்தை நோக்கி இருந்த நீலிப்பேய் தரிசனன் வீட்டில் விட்டுவந்த மனைவியைப் போல் உருவம்

கொண்டு ஒரு பெரிய கள்ளிக் கட்டையை எடுத்து அதனைக் குழந்தையாக்கி இருப்பில் வைத்துக்கொண்டு தலைவிரி கோலத்துடன் பழையனூரில் தரும சபை மண்டபத்தில் தரிசன செட்டியுடன் கூடியிருந்த வேளாண் பெருமக்கள் கேட்கும் வண்ணம் தரிசனனைப் பார்த்து ''ஐயா வடதிசை போகக்கூடாது என்று பெரியோர்களும், ஜோதிடர்களும் சொன்னதைக் கேட்காமல் புறப்பட்டு வந்துவிட்டீர்கள். உடன் வந்த என்னையும் நம் குழந்தையையும் தக்கோலத்தில் இரவு தங்கியபோது தனியாக விட்டுவிட்டு வந்தீர்களே இது நியாயமா? நாங்கள் என்ன கதியாவது; அலைந்து திரிந்து நீங்கள் இருக்கும் இடத்தை அடைந்துவிட்டேன். இதுதான் என் மாங்கல்ய பலம்'' என்று கூறினாள்.

''உன் மாயா ஜாலங்களை எல்லாம் தெரிந்துள்ளேன். நீ யார் என்பது எனக்குத் தெரியும். நீ என் மனைவி இல்லை. இங்கிருந்து போய்விடு!'' என்றார். ''பெரியோர்களே, தரும வான்களே, இவருக்கு ஏற்கனவே திருமணமாகி இருக்கும் போது என்னை ஏன் திருமணம் செய்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்துகொண்டு நடுக்காட்டில் அழைத்து வந்து விட்டுவிட்டு வரலாமா? இது நியாயமா? இப்பழி இவரை விடுமா?'' என முற்பிறவியில் செய்த பழியை மறைமுக மாகச் சுட்டிக்காட்டி அழுது புலம்பினாள். ''பெரியோர்களே! இதுவரை நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் முன்னமே உங்களிடம் கூறிவிட்டேன். இவள் என் மனைவியுமில்லை; இக்குழந்தை என் குழந்தையுமன்று. இவள் என்னையும், உங்களையும் பழிவாங்க உறுதி கொண்டுள்ளாள். இவளை நம்ப வேண்டாம்'' என்று தரிசனன் கூறினான். ''ஐயோ! இவர் என்னைப் பேய் என்றும், பிசாசு என்றும் பழிக்கின்றாரே, வடதேசம் போகக்கூடாது என்று சொன்னதற்கு ஏற்ப இவரது

குணம் மாறிவிட்டதே'' என்று நீலி மீண்டும் அழுது புலம்பினாள். வேளாளர் பெருமக்கள் அந்தப் பெண்ணைப் பார்த்து, ''உங்களது குடியின் பெயரையும், கோத்திரத்தை யும் சொல்!'' என்று கூறினர். அவளும் அதைச் சரியாகச் சொன்னாள். ''இது தவிர வேறு ஏதேனும் அத்தாட்சி உள்ளதா''? என்று கேட்க, பெண் உருவம் கொண்ட நீலி தன் குழந்தையை இடுப்பில் இருந்து இறக்கிவிட்டாள். அது தரிசனனின் மடியில் சென்று அமர்ந்து கொஞ்சிக் குலவியது. இதைக் கண்ட தர்ம சபையினர் ''வணிகரே உமது வாதம் நியாயம் இல்லாதது, உமது மனைவியின் மீதுள்ள கோபத்தை விட்டுவிட்டு ஒற்றுமையாய் இருந்து குடும்பம் நடத்துங்கள். இதுதான் தர்மம். இதோ இங்குள்ள வீட்டில் தங்கிக் காலையில் செல்லுங்கள்'' என்று கூறி ஒரு வீட்டில் இருக்கச் செய்தார்கள்.

தர்ம சபையினரின் பேச்சுக்கு மதிப்பளித்துத் தரிசனன் வீட்டினுள் சென்றான். அப்போது நீலிப்பெண் ''என் கணவர் கோபக்காரர், மானத்திற்குப் பயப்படுபவர். பெரியோர் முன்னிலையில் நான் உண்மையைப் பேசியபோது அவரது முகம் கோபத்தால் சிவந்ததை நீங்கள் பார்த்திருப்பீர்கள். நாங்கள் உள்ளே இருக்கும்போது நீ என்னுடன் வாழத் தகுதியற்றவள் என்று பேசி என்னைக் கொன்றுபோட வாய்ப்புள்ளது. இவர் கையில் கத்தி ஒன்று உள்ளது. அதை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று மிகவும் பயந்தவள் போல் பாசாங்குச் செய்தாள். கூடியிருந்த பெரியோர்கள், ''செட்டி யாரே உம்மிடம் உள்ள கத்தியை இப்படிக் கொடுங்கள். நாளை மறுபடியும் உங்களிடம் தருகிறோம். இன்றிரவு ஒற்றுமையாய் இருங்கள்'' என்று கூறினர். ''ஐயா இந்தக் கத்தி என் கையில் இருந்ததால் தான் நான் இதுவரை பிழைத்த

வந்துள்ளேன். இதை நீங்கள் எடுத்துக்கொண்டால் இன்றிரவு இப்பேய்க்கு நான் இரையாகுவது உறுதி. இந்தப் பழி உங்களையே சாரும்'' என்றான். ''செட்டியாரே உங்கள் மனைவி சொன்னது சரியாகத்தான் உள்ளது. அப்படி உம் உயிர் போனால் நாங்கள் எழுபது பேரும் எங்கள் உயிரைக் கொடுக்கின்றோம்'' என்று சொல்லி, அங்கிருந்த சாட்சிபூதேசுவரரைச் சாட்சியாக வைத்து சத்தியம் செய்து கொடுத்துக் கத்தியை வாங்கிக் கொண்டார்கள்.

அன்று இரவு நடுநிசியில் சுய உருவம் எடுத்து நீலிப்பேய் தரிசனனைக் கொன்று தன் முற்பிறவிப் பழியைத் தீர்த்துக் கொண்டது. கள்ளிக் கட்டையிலான குழந்தையையும் கீழே போட்டுக் காலால் தேய்த்துக் கொன்றுவிட்டது. இந்தப் பாறையும், கால் அடையாளமும் செந்நிறமும் இன்றும் சான்றாக உள்ளன. விடிந்ததும் வேளாண் பெருமக்கள் வீட்டை வந்து பார்த்தபோது தரிசனன் இறந்திருப்பதைக் கண்டு, ''எவ்வளவோ உண்மையை அவன் எடுத்துச் சொல்லியும் ஊழ்வினை நம் கண்ணை இப்படி மறைத்துவிட்டதே. இது என்ன பாவமோ?'' என்று அலறித் துடித்தனர். எப்படியும் வணிகனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணிச் சாட்சிபூதேஸ்வரர் முன்பு தீ வளர்த்துத் தீயில் பாய்ந்து உயிர்த் துறந்தனர். அவர்களில் ஒருவர் நிலத்தில் ஏர் உழச் சென்றிருந்தார். அங்கு அவரது மனைவியைப் போல் உருவம் எடுத்துச் சென்ற நீலிப்பேய் ''அறுபத்தொன்பது பேரும் தீயில் பாய்ந்துவிட்டார்கள். நீங்கள் ஒருவர் தான் உயிர் தப்பினீர்கள் என்று கூறியது. இதைக் கேட்டு ''இன்னும் உயிர்தரித்து இருப்பதா?'' என்று ஏங்கிக் கலப்பையில் உள்ள கூரிய கொழுவை எடுத்துத் தன் கழுத்தில் குத்திக் கொண்டு அங்கேயே உயிர் துறந்தார். இவ்வாறு நீலிப்பேய்

தரிசனனையும், எழுபது வேளாளர் பெருமக்களையும் கொன்று பழிதீர்த்துக் கொண்டது.

இச்சரிதம் நடந்தது சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு என்று கருதப்படுகிறது. இவ்வரலாறு சார்ந்த அடையாளங்களும், கோயிலும் இன்றும் உள்ளன. வேளாண் பெருமக்கள் சாட்சியளித்த லிங்கத் திருவுருவம், அதற்கு எதிரே நான்கு பெரிய பாறைகளில் வேளாண் பெருமக்களைச் செதுக்கிய உருவச் சிலைகளும், அவர்கள் தீப்பாய்ந்த குட்டையும் பழுதுபட்டு இருந்தாலும் அழியாமல் உள்ளன. எத்தனையோ லிங்க உருவங்கள் அழிந்து, கற்பாறைகள் சிதைந்து, இருக்கும் இடம் தெரியாமல் அழிந்துபோய் இருக்க, இவை மட்டும் இன்றும் உருமாறாமல் நிலைத்திருப்பதைப் பார்த்தால் சத்தியத்தை அழிக்க எவராலும் எக்காலத்திலும் இயலாது என்பது புலனாகிறது.

உண்மையாகவே நடந்த இந்நிகழ்ச்சி உலகமெங்கும் பரவியது. இதனைக் கேட்ட முடியுடைய மன்னர் மூவரும் தம் முன்னோர் செயலைப் பற்றி நாற்பெரும் படையொடும் தனித் தனியே திருவாலங்காடு போந்து அவ்விடத்தைத் தரிசித்து அச்செயலை வியந்து ஒவ்வோர் வெண்பா பாடியுள்ளனர்.

ஏழாம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தப் பெருமான் இவ்வூர்ப் பதிகத்தில் ''முன்நட்பாய் வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகை கேட்டஞ்சும் பழையனூர்'', என்று எடுத்துக் கூறியுள்ளார்.

இதனையே 12 ஆம் நூற்றாண்டில் தெய்வச் சேக்கிழார் பெருமான் ''எஞ்சிலா வகை முறையே பழையனூரார் இயல்மொழிகாத்த கதை சிறப்பித்தேத்தி'' (திருஞான சம்பந்தர் புராணம் 1011).

''நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுதொண்டர்
நவைவந்(து)
உற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கிஅச் சொல்லையே
காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை
நாடு'' என்றும் பேசியுள்ளார்.

14 -ஆம் நூற்றாண்டில் உமாபதி சிவம்,

மாறுகொடு பயைனூர் நீலி செய்த வஞ்சனையால்
வணிகன் உயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக் குழியி
லெழுபது பேரும் மூழ்கிக் கங்கை,
ஆறணிசெஞ் சடைத் திருவாலங்காட்டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப்
பேறு பெறும் வேளாளர் பெருமை எம்மால் பிறித்
தளவிட்டு இவ்வளவெனப் பேசலாமோ.

(திருத்தொண்டர் புராணம் வரலாறு - 15)

என்று விரித்துப் பேசியுள்ளார். இதனையே தொண்டை மண்டல சதகத்திலும் வள்ளலார் பாடல்களிலும் காணலாம்.

எழுபது வேளாளர் தீப்பாய்ந்ததன் சின்னமாக விள மணி மண்டபமும் சாட்சிபூதேஸ்வரர் திருக்கோயிலும் பிக்கப்பெற்று, 2-5-1996-இல் திருக்குட நன்னீராட் பெற்றுள்ளன.

வையம் நீடுக; மாமழை மன்னுக;
மெய் விரும்பிய அன்பர் விளங்குக;
சைவ நன்னெறி தான்தழைத்து ஓங்குக;
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.

★ ★ ★



அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி
திருக்கோயில் திருத்தணிகை